Ūḻiyaṉ

Malar 15, itaḻ 24

December 13, 1935

Record no. 148

# ஊழியன்

மலர் 15 — இதழ் 24

தேசிய சித்திர வாரப் பத்திரிகை.




பிரபல சினிமா நடிகர்களாகிய குமார், மிஸ். சர்தார் அக்தார் ஆகிய இருவரும் தாராம்—கி—தேவி என்ற இந்திப் படத்தில் நடிக்கிறார்கள். அவர்கள் இவ்வாறு ஓர் காட்சியில் தோற்றுகிறார்கள். —Cou.

## உள்ளுறை.

முக்கிய விஷயங்கள்.




மலேயா காசு 15 — 13—12—35 — விலை அணு 2.

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் ௧௫. சென்னை, யுவ ஹூ கார்த்திகைமீ 28௨ வெள்ளி (13-12-1935) இதழ் ௨௪

இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா
தனமேறி ஈடி லாது
சொந்தவா சேபுரியத் துயர்போக்கி
யாவருமே சுகவாழ் வெய்த
இந்நிலம் வந்தவருள் இலைபிறப்பில்
இழிவுயர்வென் இயற்கை ஓங்க
சந்தலிலா ஊழியமே நான்கொண்டேன்
நல்லனவெந் நாளும் வாழ்க!

## திரு. ஸ்ரீனிவாச ஐயங்கார் வரவு

திரு. எஸ். ஸ்ரீனிவாச ஐயங்கார் ஒரு காலத்தில் அதி தீவிரமாகக் காங்கிரஸ்த் தொண்டாற்றியவர் என்பதைச் சிறப்பாகத் தமிழ் நாடும் பொதுவாக இந்தியாவும் நன்கு அறியும். சுமார் பதினைந்து ஆண்டுகட்குமுன் திருநெல்வேலியில் நடந்த மாகாண மகாநாட்டுக்கும் ஆயிரத்தித் தொள்ளாயிரத்து இருபத்தாறில் கௌகதியில் நடந்த இந்தியன் நேஷனல் காங்கிரசுக்கும் ஸ்ரீமாந் ஸ்ரீனிவாச ஐயங்கார் தலைமை வகித்தார். இடையில் சில ஆண்டுகள் திரு. ஐயங்கார் காங்கிரசை விட்டு விலகி நின்றார். என்றாலும் காங்கிரசினின்றும் விலகியவுடன் காங்கிரசுக்குக் கேடு செய்ய முயலும் சிலரைப் போலல்லாமல் திரு. ஐயங்கார் தம்முடைய காரியத்தைப் பார்த்துக்கொண்டு அதோடு அமைந்தார்.

இப்போது கொஞ்சக் காலமாக ஸ்ரீமாந் ஸ்ரீனிவாசர் காங்கிரசில் கலக்கப் போகிறார் என்ற பேச்சு எங்கும் புறப்பட்டது. அது உண்மையென்பது இந்த வாரம் விளங்கிவிட்டது. திரு. கே. பாஷ்யம் அவர்கள் கடந்த ஞாயிறன்று திரு. ஸ்ரீனிவாசய்யங்காருக்கு ஒரு விருந்து கொடுத்துச் சென்னையின் முக்கிய காங்கிரஸ்க்காரர் பலரோடும் அளவளாவும் சந்தர்ப்பம் ஒன்றை உண்டாக்கினர். அங்கு காங்கிரஸ்க்காரர் பலர் முன்னிலையில் தாம் காங்கிரசில் கலந்து பணியாற்றுவதாக ஸ்ரீனிவாசய்யங்கார் கூறினர். ஸ்ரீமாந் ஐயங்காரைத் திரும்பவும் காங்கிரசில் இழுக்கவேண்டும் என்பது பல பெரியோர்களின் எண்ணம். சென்னைக்கு வந்திருந்தபோது ஐயங்கார் தங்களைப் பார்க்காது ஒதுங்கிப் பிணங்கி நின்றபோதினும் அவரைப்போன்ற திறமை வாய்ந்தோரின் சேவையைக் காங்கிரஸ் பெறவேண்டுவது அவசியம் என்று கருதியே யன்றோ இராஜேந்திரப் பெரியாரும் காந்தியடிகளும்கூட உறுமீன் இருக்குமிடம் தேடிச் சென்று வலை வீசினர்.

திரு. பாஷியம் விருந்தின் போது திரு. ஐயங்கார் காங்கிரஸ் நுழைவு இன்று தமிழ் நாட்டுக் காங்கிரசை நடத்துவோரை விலக்குதற்கல்ல யென்பது தெளிவாக்கப்பட்டதாம். ஒருவர் வரவால் மற்றவர் விலக்கம் நேர என்ன அவசியம்? காங்கிரஸ் போன்ற ஸ்தாபனத்திற்கு ஏராளமான தலைவர்களும் தொண்டர்களும் தேவையன்றோ? காங்கிரசில் புதிதாகச் சேருவோர் ஒவ்வொருவருக்கும், அன்றி இடைக்காலத்தே விலகியிருந்து திரும்பக் கூடும் அனைவருக்கும், அல்லது இன்று காங்கிரசை நடத்திக் கொண்டிருக்கும் எல்லோர்க்கும் நோக்கம் ஒன்றே ஒன்றுதான் இருத்தல்வேண்டும். அதுதான் தேச விடுதலை யென்பது. காங்கிரசைப் பற்றுவது நாட்டை விடுவிக்க வேண்டும் என்ற புனிதமான காரியத்துக்காகவே. தலைமை எவர் வகித்தால் என்ன? அதில் பொறுமைப்படுவோர் எவராயினும் அவர் தேச பக்தரார். இதனால் எவரையும் குறிப்பிட்டுச் சொல்வதாக எண்ணற்க! பொதுவாக எதிலும் பதவி வேட்கை அநேகரை விட்டபாடில்லை. எதிலும் தலைமையை விரும்பாது தொண்டு செய்வோரே சீரியார்.

பதவி பெறத் தகுதியுடையாரைத் தேடிக்கொண்டு பதவி தானே ஓடிவரும். பலர் பதவிக்கு விரும்பி அலைகின்றார். சிலர் 'ஐயோ! அது வேண்டாம்! வேண்டாம்! நான் தொண்டு செய்வதோடு அமைகின்றேன்' என்கிறார். அத்தகையாரைப் பதவி, தேடியடைந்து பெருமை பெறுகிறது. இந்த மாறுபட்ட இயற்கையைப் பல இடங்களினும் காண்கின்றோம். பதவிக்காகச் சேவை செய்வது விரும்பத் தகாதது. சேவை பிறவியின் பயன் எனக் கருதுவோரே மேலோர். அத்தகையார் பலரைக் காங்கிரஸ் பெறல் வேண்டும். அதனால் இன்று காங்கிரசில் அன்ன நீர்மையாளர் இல்லையென்பது பொருளன்று. காங்கிரசிலிருப்போரைப்போல் தந்நலம் விடுத்த தியாகிகள் வேறு எந்த இயக்கத்தினும் இல்லையென்பது உறுதி. அவர் தொகை மேலும் மேலும் வளரவேண்டும்.

காங்கிரஸ் நாட்டு விடுதலைக் காதல்கொண்ட எல்லோரையும் ஏற்றுக்கொள்ளும். எனவே பழய காங்கிரஸ்க்காரராகிய ஸ்ரீமாந் ஸ்ரீனிவாசய்யங்காரை மகிழ்ச்சியோடு வரவேற்பதில் வியப்பு ஒன்றுமில்லை. மனிதனிடம் தவறு இருப்பது இயற்கை. ஸ்ரீமாந் ஸ்ரீனிவாசய்யங்கார் பரிபூரணத் தன்மை வாய்ந்தவர் என நாம் கூறவில்லை. ஆனால் அவர் கூட்டுறவால் இம்மாகாணத்தில் காங்கிரஸ் வேலை பெரிதும் ஆக்கம் பெறும் என நாம் கருதுகிறோம். ஒரு பெரிய ஸ்தாபனத்தில் தொண்டாற்றுபவர் சிறிய மாறுபாடுகளையெல்லாம் பொருட்படுத்தி ஒதுங்குதல் ஆகாது. விடுதலை ரத்தம் வீறிட்டு ஓடும் உள்ளம் வாய்ந்த ஒரு இந்தியனுக்கு இந்நாட்டில் புகலிடம் காங்கிரசைத் தவிர வேறு என்ன இருக்கிறது? இதனையுணர்ந்தே—விடுதலைச் சிகரத்தில் ஏறத் தமது அடக்கி வைத்திருந்த ஆற்றலை முழுதும் செலுத்தும் கருத்துக்கொண்டே திரு. ஐயங்கார் காங்கிரசில் திரும்பவும் சேருகிறார் என நாம் நினைக்கிறோம். இன்று நமது காங்கிரசுக்கு வரும் ஸ்ரீமாந் ஸ்ரீனிவாசய்யங்காருக்கு நல்வரவு கூறுவோம்.

---

# இடி முழக்கம்

## ஸ்ரீராம பக்தர்களா?

ஸ்ரீராமன் தண்டகாரண்யத்தை அடைந்தபோது சில நாட்கள் தங்கி வந்த பெருமையையுடைய பஞ்சவடியென்னும் நாசிக், இன்று அந்த ஸ்ரீராமன் தம் வாழ்க்கையால் உலகிற்குக் காண்பித்த சகோதர தர்மத்திற்கு முற்றிலும் முரண்பாடாயிருக்கிறது. ஸ்ரீராமன் குகன் என்ற வேடனைத் தன் சகோதரனாகக் கொண்டார்; விபீஷணன் என்ற அரக்கனைத் தன் சகோதரனாக ஏற்றார்; குரங்குகளோடும், வனவாழ்க்கை நடாத்திய எத்தனையோ ஜாதி மகரிஷிகளோடும் சொந்தக்காரர்போல் பழகி வந்தார். அப்படிப்பட்ட புண்ய புருஷர் வாழ்ந்த இடத்தில் வசிக்கும் அவரது பக்தர்கள் ஹரிஜனர்களென்று பாரத அன்னையின் புதல்வர்களில் ஒரு பகுதியாரை ஒதுக்கிவைத்து தெருவில் கூட நடக்க விடுகின்றார்களில்லை. என்ன அநீதம்! முறைகேடு! இந்த இந்துக்களை ஸ்ரீராமனை வழிபடுபவரென்று எவ்வாறு கூறுவது!

## ரதம் போச்சு!

இத்தகைய இந்துக்களோடு கடந்த ஆறு வருடங்களாக ஹரிஜனர்கள் தம் உரிமை கோரி சத்தியாக்கிரகம் செய்து வருகிறார்கள். ஆதலால் ஸ்ரீராமர் கோவிலில் ரதோற்சவமே நடவாமல் நின்றுபோயிற்று. சென்ற செவ்வாய்க்கிழமை வெகு பிரயாசைப்பட்டு மாஜிஸ்திரேட்டின் உத்தரவைப் பெற்று சனாதனிகள் அவசரம் அவசரமாக அவ்வுற்சவத்தை நடத்தினார்கள். ஊர் முழுதும் போலீஸ் பந்தோபஸ்து போடப்பட்டிருந்தது. ஆனால் அவர்கள் வயிறெரிய தேர் அச்சு முறிந்து சாக்கடையில் சாய்ந்துவிட்டது! இதனை வைதீக பாஷையில் வியாக்யானம் செய்தால், சனாதனிகளின் செயல் கடவுளுக்குக் கூடப் பிடிக்கவில்லையென்று பொருள் கூறவேண்டும். இதை நாசிக் சனாதனிகள் உணர்வார்களா?

## பிழைக்கும் மதி

சென்னைக் கார்ப்பொரேஷன் காங்கிரஸ் பொன் விழாவைக் கொண்டாடுவதற்காக 500 ரூபாய் 'சாங்ஷன்' செய்திருக்கிறதென்ற செய்தி நேயர்கட்கு இன்பமூட்டலாம். பாபுராஜேந்திரருக்கு ஒரு மாதத்திற்கு முன்பு ஒரு உபசாரப் பத்திரமளிப்பதற்காக ஒன்றிரண்டுநூறு ரூபாயை சாங்ஷன் செய்யாத கார்ப்பொரேஷன் இம்மாதம் அவர் தலைமை தாங்கும் சபையின் விழாவுக்கு 500 ரூபாயை சாங்ஷன் செய்வதென்றால் ஜஸ்டிஸ்காரர்கள் எவ்வளவு சீக்கிரத்தில் செல்வாக்கிழந்து வருகிறார்கள் என்பதைத் தெளிவாகக் காணலாமன்றோ? ஜனாப் அப்துல் ஹமீத்கான் மேயரானதும் இந்த பெரிய காரியம் நடைபெற்றுவிட்டதென்ற பெருமை அவருக்குச் சேருமாயினும் வெள்ளைக்கார மெம்பர்கள் காண்பித்த மரியாதையையே அதிகம் பெருமைப்படுத்தவேண்டும். பொன்விழாத் தீர்மானம் வாதத்திற்கு வந்ததும், ஜஸ்டிஸ் அங்கத்தினர் பலமாக எதிர்த்தார்கள்; வெள்ளைக்கார மெம்பர்களோ இரு சார்பிலும் கலாது மௌனமாக இருந்துவிட்டார்கள். வெளிநாட்டிலிருந்து இந்தியா வந்திருக்கும் இன்னார் தீர்மானத்திற்கு பாதகம் விளைவியாதிருந்து காண்பித்த புத்திசாலித் தனம்கூட ஜஸ்டிஸ் அங்கத்தினர்கட்கு இல்லாமல் போனது வருந்தத் தகுந்த விஷயம். பிழைக்கும்மதி வெள்ளைக் காரர்கட்கு அதிகம்; இந்தியருக்குக் குறைவு என்பதற்கு இந்த சம்பவம் ஓர் நல்ல எடுத்துக் காட்டு. சுயராஜ்ய இந்தியாவிலும் இத்தகைய வெள்ளைக்காரர்கள் சௌகரியமான இடம் பெற்றுக்கொள்வார்கள் போலிருக்கிறது.

---

# 28-ந் தேதி ஞாபகமிருக்கட்டும்

அன்றுதான் காங்கிரஸ் பொன் விழா.

டிசம்பர் 28-ந் தேதி சனிக்கிழமை ஓர் சுபதினம்! அந்நாள் தேசீய மகாசபையின் பொன் விழா நடைபெறும் நன்னாள்! அன்று இந்திய மக்கள் அனைவரும் தேச விடுதலைக்காக தியாகம் செய்ய உறுதிப் படுத்திக்கொள்ள வேண்டும். அதற் கறிகுறியாக வீடுகளில் தேசீயக் கொடியைப் பறக்க விடுக! வீடு வாயில்களை அணி செய்க! தீபாலங்காரத்தால் சிறப்பிக்க! அன்று நடைபெறும் ஊர்வலங்களில் கலந்து கொள்க! பொதுக் கூட்டங்களில் பங்கு கொள்க!

---



# மேனகா (ஓர் விமர்சனம்)

(ஆர். சாமிநாதன்)

நீண்ட நாளாக எதிர்பார்க்கப்பட்டு வந்த திருப்பூர் ஸ்ரீ ஷண்முகானந்த டாக்கி கம்பனியாரின் மேனகாவென்னும் படம் 6-12-35ந் தேதி சென்னை கிரௌன் டாக்கியில் வர்த்தகக் காட்சியாகக் காண்பிக்கப்பட்டது. அப்படத்தின் டயரக்டராகிய ராஜா சாண்டோ, நாவல் (மேனகாவின்) ஆசிரியராகிய வடுவூர் திரு. துரைசாமி ஐயங்கார் உட்பட ஏராளமான அன்பர்கள் விஜயம் செய்திருந்தார்கள்.

மேனகா புராணப் பழங் கதை மூட்டைகளை விட்டு விட்டு தமிழ்நாட்டு சமுதாய வாழ்க்கையைச் சித்திரித்துக் காட்டும் ஓர் படமாகும். இதற்கு முன் ஒருவரிருவர் சமுதாயப் படங்களை எடுக்க முயன்றார்கள். அவைகளின் கதி என்ன வாயிற்று என்று நான் கூறத் தேவையில்லை. பொதுவாக அவற்றை நினைக்கும்போது ஷண்முகானந்த டாக்கீசாரை எவ்வளவோ புகழவேண்டும்.

இப்படத்தில் T. K. சகோதரர்கள் என்று வழங்கப்படுகின்ற திருவாளர்களான சங்கரன், முத்துசாமி, ஷண்முகம், பகவதி ஆகியவர்கள் முறையே சாம்பசிவ ஐயங்கார், பெருந்தேவி, நைனாமுகம்மது, வராகசாமி ஆகியவர்களாகவும், ஹாஸ்ய நடிகரத்தினமென்று சொல்லத் தகுந்த திரு. N. S. கிருஷ்ணன் சாமாவையராகவும், மிஸ் எம். எஸ். விஜயாள், மிஸ் K. T. ருக்மணி, மிஸ் T. விமலா, மிஸ் T. K. ராஜாமணி, மிஸ் T. R. காந்தாமணி, மிஸ். T. K. ராஜசுந்தரி ஆகியவர்கள் முறையே மேனகா, நூர்ஜஹான், கமலம், கனகம்மாள், கோமளம், தங்கம்மாள் ஆகிய பாத்திரங்களாகவும் நடிக்கிறார்கள். இவர்களைத் தவிர வேறு பல அன்பர்களும் கதையில் பங்கெடுத்துக் கொள்கின்றனர். அவர்களில் சிலர் கம்பனி பங்குதாரர்களும் நிர்வாகஸ்தர்களுமென்று உணரும்போது எனக்கு சந்தோஷம் மிகுகின்றது. நிர்வாகஸ்தர்களே நடிப்பில் பங்கு கொள்வதென்றால் "ஏதோ விஷயந் தெரிந்தவர்களால் படமெடுக்கப்படுகின்றது" என்று யூகித்துக்கொள்ளலாமல்லவா? சினிமாக் கலையின் 'அ ஆ இ ஈ' கூடத் தெரியாத பலர் படம் பிடிக்க முன் வரும் அந்த அநியாயத் தமிழ்நாட்டில் நிர்வாகஸ்தர்களே நடிகராக வருவதைக் காணும்போது யார்தான் புகழமாட்டார்கள்?

நிற்க, இந்த மேனகாவில் பொதுவாக எல்லோரும் நன்றாக நடிக்கிறார்கள். ஒரு நண்பர் என்னிடம், "சார்! சேவகன் முதல் கதாநாயகன் வரையிலுமுள்ள எல்லோரும் நன்றாக நடித்து விடுவதால் பெரிய ஆக்டர்கட்கும் சிறிய ஆக்டர்கட்கும் வித்தியாசமே இல்லாமலாகி விடுகிறது" என்றார். இது ஒரு அளவுக்கு உண்மையென்றே கூறவேண்டும். ஆராய்ந்து பார்த்தால் இந்தப் படத்தின் நடிகர்களில் முதல் ஸ்தானம் யாருக்குக் கொடுப்பதென்பது குழப்பமாகவே இருக்கிறது.

### திரு. கிருஷ்ணன்

திரு. என். எஸ். கிருஷ்ணன் படத்தை பார்ப்பவர்கள்—ஆடவரோ பெண்டிரோ படித்தவரோ அல்லாதவரோ யாராயினும் சரி—தம்மைப் புகழுமாறு செய்துவிடுகிறார். முதலில், சுத்தப் பார்ப்பனரல்லாதாராகிய இந்நாகர்கோவில் வாசி எந்த பிராமணனும் தோற்றுப்போகும்படியான 'பிராமணத் தமிழை' வாரிக் கொட்டிக் கொண்டிருப்பது எவருக்கும் வியப்பைக் கொடாமல் போகாது. பலர் இவரை பிராமணரென்றே இன்னும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இன்னார் தம்மைப் பொறுத்த வரையினும் சினிமாவுக்கான பேச்சு, சிறு விகடங்கள், பாட்டு முதலியவற்றையெல்லாம் சொந்தமாக நிர்மித்துக் கொண்டாரென்று கேட்கும்போது உண்மையில் நான் வியப்படைகிறேன். இவரது நடிப்பையும், பேச்சு முதலியவற்றையும், கதை முழுதும் இவர் நிரந்தரமாக வந்து கொண்டிருப்பதையும் கண்டால் படத்திற்கு மேனகாவென்ற பெயரைக் கொடுப்பதைவிட சாமா ஐயர் என்ற நாமத்தைச் சூட்டிவிடலாமோ என்று கூட தோற்றுகிறது. திரு. கிருஷ்ணனின் நடிப்பு மேலானதென்பதற்கு அவர் கதை முழுதும் (ஒன்றிரண்டு சீன்கள் நீங்க) வந்து கொண்டிருந்தாலும் பார்ப்பவர்கட்கு சலிப்பு ஏற்படாததே ஒரு முக்கிய சான்றாகும். இவரது தோற்றத்திலும், பாவனையிலும் ஓர் தனிரசமிருப்பதால் எந்த விடத்தில் சரியாக நடிக்கிறார், எந்த விடத்தில் சரியாக நடிக்கவில்லை என்பதை விளக்கமாகத் தெரிவிக்க முடியாது. கதையில் பெரிய விஷமத்தனம் நடைபெறுகின்றபோதெல்லாம் அவர் ஒன்றும் தெரியாத பரமசுத்தன் போல் நடித்துக் கொள்வதைக்கண்டால் ஒரு கொடியனின்லட்சணத்தைப் பார்க்கலாம். 'கோமளிக்கு' முத்தம் கொடுக்கும் போதும் பிறகும் நடிக்கும் நடிப்பை எவருக்கும் மறக்க முடியாது. வராகசாமியிடம் மேனகா ஓடிவிட்டாள் என்று மறைமுகமாகக் கூறும் கூற்று, நடிப்பு முதலியவற்றிற்கான பாராட்டுதலை திரு. கிருஷ்ணனுக்குக் கொடுப்பதா அல்லது வடுவூர் துரைசாமி ஐயங்காரின் நாவலுக்குக் கொடுப்பதாவென்றே தெரியவில்லை. இதுபோல் அவரைப் பாராட்ட வேண்டிய இடங்கள் பலப்பல.

### திரு. முத்துசாமி

இவரது சூழ்ச்சிக்கு மிகத் தகுதியான முறையிற் நடந்துகொள்கிறார்

பெருந்தேவி. இந்தப் பாத்திரமாக (பெருந்தேவியாக) நடிப்பவர் ஒரு ஆடவன் (திரு. முத்துசாமி) என்பது பலருக்குத் தெரியாது. சினிமா புத்தகத்தில் முத்துசாமியென்ற பெயர் போடப்படவில்லையானால் எந்த மனிதனும் ஒரு பச்சை மொட்டை அம்மங்கார் என்றே நினைப்பான். இவரது அசைப்பு, இழுப்பு, முகவெட்டு, அசல் 'பிராமண நாட்டுப்புறப் பேச்சு' எல்லாவற்றையும் சிந்தித்தால் இவரை சினிமாக்கலைக்குப் பிறந்தவரென்றே சொல்லத் தோற்றும். துப்பட்டிக் கலக்டர் போன்ற சில அரைகுறைப் பதங்களையும் பாட்டிகளின் பழமொழிகளையும் வாரிச் சொரியும்போது முகத்தில் காணப்படுகின்ற 'யதார்த்த வாதித்தனம்' அவர் பாடம் படித்துப் பேசுகிறாரென்பதையே நினைக்கச் செய்யாது. இவரிடம் வீட்டில் நாட்டுப் பெண்கட்குக் கொடுமைசெய்யும் விஷயமறியா 'அசல்' 'மாமி' விதவையையே காண்கிறோம். இந்தவிடத்தில் ஒன்று கூறியாக வேண்டும். இவரும் இவரது சகோதரர்களும் நாடக நடிகர்கள். தமிழ்நாட்டில் நாடக நடிகர்கள் நடித்த சினிமாக்கள் தம் பாதையை விட்டு நாடகம்போல வாகிவிட்டது கண்கூடு. அந்தக் குறை இந்த முத்துசாமி சகோதரர்களின் படத்தில் காணப்படாதிருப்பது பாராட்டப்பட வேண்டியதாகும்.

### மிஸ். காந்தாமணி

பெருந்தேவியின் சகோதரி கோமளமாக நடிப்பவர் மிஸ் T. R. காந்தாமணி. இவர் ஓர் இளம் பெண். சினிமாக் கலைக்குப் புதியவரென்று நினைக்கிறேன்: இருந்தாலும் தன் பங்கான ஆக்டு எந்த மாதிரியாக நிகழவேண்டுமோ அதனைச் சற்றும் குறைபடாது முடித்துவிடுகிறார். கதையில் பெருந்தேவிக்கேற்ற ஒரு சகோதரியாக கோமளம் வாய்த்திருந்தாளென்பதற்கு மிஸ். காந்தாமணியின் நடிப்பே சாட்சி.

### மிஸ். விஜயாள்

மிஸ். எம். எஸ். விஜயாள் தான் மேனகா—கதாநாயகி. விஜயாள் ஓர் சிறுமி. இன்னும் வயது 15 ஐ கூட அடையவில்லை. அதற்கு முன் சினிமா உலகில் வளர்ந்துகொண்டே வருகின்றாள். அவளது வளர்ச்சிக்கு மேனகா ஒரு உதாரணம். இவளது நடிப்பு சிற்சில விடங்களில் சற்று சீர்ப்படலாம் போல் தோர்றுகிறது; ஆயினும் பெரும்பாலான தமிழ்நாட்டு சினிமா நடிகைகட்கு இளைத்ததல்ல. இவளுக்கு ஒரு நல்ல எதிர்கால மிருக்கிறதென்பது என் திடமான நம்பிக்கை. (மேனகாவில்) மிஸ். விஜயாள் உண்மையான பரிசுத்த-குல ஸ்திரீயைப்போல காணப்படுகிறாள். பல தமிழ்நாட்டு நடிகைகளிடத்தில் குல ஸ்திரீகளாக நடிக்கும்போது குல ஸ்திரீகட்கு வேண்டிய பரிசுத்தத் தன்மை மங்கி (Voluptuous) ஆக இருப்பதைக் காணலாம். நான் ஈண்டு கூறும் பரிசுமான தோற்றமென்பதை அழகின்மையென்று பொருள்படுத்திவிடக் கூடாது. பரிசுத்தத்திற்கும் அழகுக்கும் சம்பந்தம் கிடையாது. என் கருத்தைத் தெரிந்துகொள்ள வேண்டியவர் சண்டிதாசில் வரும் மிஸ் உமாவை உதாரணமாக எடுக்க. அவர் கண்ணுக்கணியாக விருக்கிறார்; அதேபோது பரிசுத்தமான ஒரு கதாநாயகியாகவும் தோற்றுகிறார். அத்தகைய தோற்றத்தையே பரிசுத்தத் தோற்றமென்கின்றேன்,

நிற்க. மிஸ். விஜயாளின் ஆக்ஷனில் மகா மோசமான ஓர் இடம் கத்தியுடன் தற்கொலை செய்ய முயலும் போது பாடுவது. அது கேட்பதற்கும் பார்ப்பதற்கும் நன்றாயிராததோடு அந்தவிடத்தில் திடீரென ஓடிவந்து காப்பாற்ற வேண்டியவளான நூர்ஜஹான் பாட்டு முடியும்மட்டும் வெளியே காத்து நிற்க வேண்டியவளாகின்றாள். சினிமாக்காரர்கள் அந்தப் பாட்டை வெட்டி எடுத்துவிட்டால் நன்றாயிருக்கும்.

### மிஸ். ருக்மணி

மேனகாவின் ரக்ஷகியாகவும் தோழியாகவும் இருப்பவள் நூர்ஜஹான்! முஸ்லிம் பெண்ணாகிய இவள் இந்துப் பெண்ணாகிய மேனகாமாட்டுச் சுரக்கும் அன்பை நோக்கினால், காந்திஜீ விரும்பும் இந்து-முஸ்லிம் ஒற்றுமையின் பரிபூரண உருவம் விளங்கும். நூர்ஜஹானாக நடிக்கும் மிஸ் K. T. ருக்மணி முந்திய படங்களைவிட இதில் நன்றாக நடிக்கிறாரென்பதையும், எனவே நாளடைவில் வளர்கின்றார் என்பதையும் கூற விரும்புகிறேன். தமிழ் நாட்டில் 'சினிமாக் கட்' உள்ள ஒரு சில நடிகைகளில் இவர் ஒருவர். முஸ்லிம் பெண்ணாகப் புனைந்த வேஷத்தில் இவர் கெ. டி. ருக்மணி என்ற ஞாபகத்தையே பார்ப்பவர் மனதிலிருந்து அழித்துவிடுகிறார். நாயகனோடு நூர்ஜஹான் குதூகலிப்பது ஒரு சயன அறையை நம் முன் தெற்றெனக் காண்பிக்கிறது. புருஷன் குற்றவாளி யென்று கண்டதின் பின் இவள் நடந்து கொள்ளும் முறை உண்மையில் புருஷனை மறவாது வாழும் ஒரு காதல் மனைவியை நினைப்பூட்டுகிறது. ஓரிடத்தில் நூர்ஜஹான் ஆர்கன் வாசிக்கும்போது அதில் தாளம் போடுகிறார். பாவம்! ஆர்கன் வாசிக்கத் தெரியாதென்றால் அந்தவிடத்தை யொழித்திருக்கலாம். டயாக்டர்கள் இது போன்ற இடங்களில் விசேஷ கவனம் செலுத்த வேண்டும்.

### மிஸ். ராஜாமணி

கனகம்மாளாக வருபவர் மிஸ். டி. கே. ராஜாமணி. இவரும் தம் 'பகுதியை' வெற்றியாக முடிக்கிறார். புதல்வனுடன் பேசும்போது இவர் காண்பிக்கும் உரிமையும், குடும்பப் பழக்கத்தால் எழும்பும் சொற்களும் சம்சார வாழ்க்கையில் பட்டார் மனதில் புகைப்படம் எடுத்தாற்போல் பதியும். பேத்திமீது இவர் காண்பிக்கும் வாஞ்சை அபாரம். மற்றொரு இடத்தில் தம் நாட்டுப்பெண்ணுக்கு சிகிச்சை செய்து கொண்டிருக்கும் ரங்கராஜுவின் புதல்வியைக் கட்டிப் பிடித்து 'ஜாதியேது; மதமேது' என்று கூறுமிடம் எவரையும் மறக்கச் செய்யாது. ஜாதியில்லையென்று கூறும் இந்தவிடமும் பாரதியாரின் "வாழ்க தமிழ் மொழி" யொலிக்கும் பள்ளிக்கூடக் காட்சியும் காலத்திற்கேற்ற தத்துவங்கள் சினிமா உலகில் வருவதற்கான முன்னறிகுறிகளாகும்.

### மூவர்

திரு. பகவதி, திரு. ஷண்முகம், திரு. சங்கரன் ஆகியோர் ஒவ்வொருவரும் தத்தம் 'பார்ட்டுகளை' செவ்வனே நடித்துக் காண்பிக்கிறார்கள். வேஷம் ஒவ்வொருவருக்கும் மிக நன்றாகப் பொருந்தி யிருக்கிறது. அவர்கள் பேச்சை நோக்குகையில் பிராமணகுலத்தவரா "சூத்திரர்களா" வென்ற உண்மையே தெரியாமல் போய்விடுகிறது. இம்முக்கிய நடிகர்களில் நயினாமுகம்மதாக நடிக்கும் ஷண்முகத்தைத் தவிர

(44-ம் பக்கம் பார்க்க)



# அதிவீரனின் தமயந்தி

(ராமானுஜம்)

அதிவீர ராமபாண்டியன் கற்பனைக் கனவினில் திளைக்கும் ஓர் செம்புலவராவர். சாதாரணமாக, புலவர்களைப் பற்றிக் கூறுவது போன்ற "பகற்கனவு" அவரது வளம் பொருந்திய மூளையில் சதா எழுந்து படர்ந்துகொண்டேயிருக்கும். கண்கள் தம்மை நாடும் பொருட்களில் "எங்கு இன்ப முள ?" என்று ஆராய்ந்த வண்ணமேயிருக்கும். நம் விழிகட்கு வெறும் ஜடப் பொருட்களாய்த் தோற்றுபவை யாவும் அவர் கண்கட்கு பேசுபவைகளாகவும் அரும் பெரும் தத்துவங்களைப் போதிப்பவைகளாகவு மிருக்கும். ஷெக்ஸ்பீயர் மகாகவி,

"மரத்தில் நாவை மாண்புறக்
[காண்பர்
சலத்தில் உண்மைகள் சலித்திடக்
[காண்பர்
புல்லும் புதரும் கல்லும் மலையும்
சொல்லும் பேருட் சுருதிக
[ளவர்க்கே"

என்று ஓரிடத்தில் பாடியவாறு, அதிவீராமனின் புலமைப் புலன்கள் இயற்கைப் பொருட்களோடு எக்காலமும் வார்த்தையாடிக் கொண்டேயிரா நிற்கும். அத்தகைய புலனுணர்ச்சிகளும் பகற்கனவு காணும் மூளையும் சேர்ந்து சித்திரங்கள் எழுதிக் குவிக்கத் தொடங்கினால் அச்சித்திரங்கள் எவ்வளவு தான் அழகொழுகி வடியா! அவைகள் உண்மையில் நம்மோடு கனிந்து பேசாவோ? நம் புலன்களைத் தட்டி எழுப்பாவோ? அப்படிப்பட்ட சித்திரங்களன்றோ உண்மைச் சித்திரங்கள்? சிவப்பிரகாச முனிவர்,

"——மலரவன் செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயாப்
புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு"

என்று புலவர்கள் படைக்கும் கவியுடம்பைப் பற்றிப் புகழ்ந்த புகழ்ச்சி இத்தகைய சித்திரங்கள் வெளிவரும் போதன்றோ விளக்கமுறும்! நல்லது இங்கு தமயந்தியைப்பற்றி அதிவீரர் எழுதும் சில கற்பனைச் சித்திரங்களைத் தருகின்றேன்:—

* * *

தமயந்தியின் உருவத்தை ஒவ்வொரு அங்கமாக, தம் கற்பனையென்னும் வர்ணம் பூசி நமக்குக் காண்பிக்கு முன்பு, புலவர் பெருமான், மொத்தமாக அவள் எவ்வாறு இருப்பாள் என்று வர்ணிக்கும் முறையில் ஒரு "ஔட் லைன்"த் தர விரும்புகிறார். ஒரு பொருளை உள்ளூர்ந்து (தனித் தனிப் பகுதிகளை) வர்ணிக்கு முன்பு ஒரு ஸ்தூலத் தோற்றத்தைத் தருவதன்றோ வர்ணனைக்காரரின் உத்தம முறை?

நல்லது. அவர் அம்முறையை எவ்வாறு கையாடுகிறார்?

"அவுட் லைன்"த் தர விரும்பிய அதிவீரர் ஒரு உவமையால் அதாவது "இன்னாரைப் போன்றவள் தமயந்தி" என்று கூறும் முறையால் சமாளிக்க நினைக்கின்றார். அப்படி நினைப்பவரின் மூளை ஒரு உவமானப் பொருளைத் தேடுகின்றது. பாவம்! உலகில் எந்த பெண்ணும் தமயந்தியை அனுசரித்தாற்போல நெருங்க லாயக்குடையவளாகத் தெரியவில்லை. உடன்,

முளரியந் தவிசிலினிது வீற்றிருக்கும்
முகிழ்முலை மதர்விழித் திருவே

தான் தமயந்திக்கு சமமானவள் என்று நினைக்கின்றார். அது மட்டுமா? "அந்த திரு (மகாலட்சுமி)தான் தமயந்தி; தமயந்திதான் அம் மகாலட்சுமி" என்றும் அவருக்குத் தோற்றுகிறது. உடனே அத்திருவே,

தளிர்நலங் கவற்று மலத்தக மலர்த்
[தாள்
தமயந்தியெனும் பெயர் தரித்தாள்

என்கின்றார். அதாவது அந்த மகாலட்சுமிதான் தாமரைப் பூவைவிட்டு இறங்கி, தமயந்தி என்ற நாமத்தோடு உலகிற்கு வந்திருக்கின்றாள்—என்று முடித்து விடுகிறார். இவ்வாறு சொல்வதால், தமயந்தி அழகு, வீரம், விஜயம், சம்பத்து, ஒள்ளொழுக்கம், நற்சிந்தை, மென்மை, விகாசம், அருள் என்கின்ற எல்லாப் பண்புகட்கும் உறைவிடம் என்று காட்ட விரும்புகின்றார் போலும்! இந்த செவ்விய கருத்தோடு இன்னொரு புதிய கற்பனை! திருமகள் எப்போதும் மென்மை பூமிற்கும் தாமரைப் பூவை தவிசாக(ஆசனமாக)க்கொண்டு அதன் கண்ணே செவ்விய பாதங்களை வைத்துக் கொண்டிருப்பவளன்றோ? ஆகவே அவளது பாதம்

தென்னிந்திய வியாபார சங்கத்தின் வெள்ளி விழா [illegible] வி. பி. ஹாலில் நடைபெற்றது. டே. த. [illegible] தலைமை வகித்தார். —[illegible]

கள் தாமரைப் பூவைத் தோற்கடிக்கத் தகுந்த பசுமையும், செம்மையும், தண்மையும் பெற்றிருக்கலாம். நமது பெண்கள் கல்லினாலான ரோடுகளில்தான் நடக்கிறார்கள்; அப்படியிருந்தும் கால் அங்கலவிட எவ்வளவோ பசுமையாக விருக்கிறது! எனில் மலரிலேயே பயிலும் செம்பாதங்கள் பூவைவிடப் பசுமையாக விருக்கக்கூடுமன்றோ! இதனை, திருமகள் தமயந்தியாகத் தோற்றியிருக்கின்றாளென்று கூற வந்த புலவர், மறந்துவிடாது "தளிர் நலத்தைக் கவறும் அலத்தகம் (செம்பஞ்சிச்சாறு) தோய்ந்த பசிய தாள்களையுடைய தமயந்தி என்ற நீண்ட சொற்றொடரினால் நமக்கு அறிவுறுத்துகிறார்! எவ்வளவு எச்சரிக்கை வர்ணிக்கும் போது எடுத்துக் கொள்ளப்படுகிறது! தம் கூற்றை வலியுறுத்துவதில் எவ்வளவு சாதுரியம்!

அப்பால் இந்த வர்ணனையில் ஒரு விசேஷம். தமயந்தியை மகாலட்சுமியாக உருவகப்படுத்திய புலவர் மகாலட்சுமி கடவுள் என்று கருதப்பட்டு வருவதால் முதலில் அவளது பாதத்தைப பற்றிக் கூறுவதே மரியாதை என : கருதினர் போலும்; ஆதலா லேயே 'இதத்தைய பாதத்தையுடைய தமயந்தி' என்று சொல்கிறார்!

தமயந்தியின் முகம்

நிற்க, புலவர் தமயந்தியின் முகத்தைப் பற்றிக்கூறும் செய்யுள் வருமாறு:—

ஒழு கொளி விரிந்த சுதிர்மணி வண்
[ணன்
உந்தியந் தாமரை யுறைவோன்,
முழுமதிக் கலையுள் நிறைந்த பேரழகை
யொண்டு கொண்டரிபரந்தகன்ற
மழைமதர் நெடுங்கண் தமயந்தி வதனம்
வகுத்தனன்; காத்தினலெடுத்த
புழைவழித் தோன்றும் விசும்பினை
[யன்றோ
களங்கமென்று இன்னமும் புகல்
[வார்!

அதாவது—மகாவிஷ்ணுவின் நாபிக் கமலத்தில் பிறந்த பிரமனானவன் (படைப்புக் கடவுள்) இந்த தமயந்தியைப் படைப்பதற் கேற்ற பொருள் யாது என்று எங்கும் தேடினான். தச்சர்கள் ஒரு உருவத்தைப் படைக்க வேண்டும்போது மரத்தைத் துணை கோலுகிறார்கள். கல் தச்சர்கள் பாறையை நாடுகிறார்கள். செம்பில் விக்கிரக வேலை செய்வோர் செம்பைப் பற்றுகிறார்கள்........இதே போல பிரமனும் ஒரு சாதாரண உலோகத்தை நாடினால் அவ்வளவு அழகாக இராது என்று கருதுகிறான்- உடன் அழகு, குளிர்ச்சி, பசுமை, கவர்ச்சி, பிரகாசம் முதலியவற்றைப் பெற்றதும் காம வேட்கையை யுண்டு பண்ணுவதும், எல்லா மக்கட்கும் சமமாக அருள் சுரந் தின்பமூட்டுவதும், உயர்ந்தோன் தாழ்ந்தோன், ஏழை தனவந்தன், முதலாளி தொழிலாளி என்கின்ற வித்தியாசத்தைப் பாராது ஒளிவீசுகின்றதுமாகிய பூர்ணசந்திரன் மூளையில் தட்டுப்படுகிறான். உடன் அவனைப் பிடித்து அவனிடமுள்ள அழகு முழுவதையும் தோண்டியெடுத்து, தமயந்தியின் முகத்தைப் படைத்தான். அப்படிப்படைத்தது பொய்யல்ல வென்கிறார் அதி வீரர். அவ்வுண்மையை மெய்ப்பிப்பதற்காக ஒரு நல்ல சான்று எடுத்துக் காண்பிக்கப்படுகிறது. அதாவது "சந்திரனில் துளை போட்டு அழகை எடுத்து விட்ட பிறகு சந்திரனில் ஏற்பட்ட துளைதான் கருப்பாக தெரியும் பொருள்; அதனை உலகினர் அறியாது கறையென்று சொல்லி வருகிறார்கள்" என்கிறார்.



திரு. ஜெ. மத்தாய். சென்னை விமான நிலையத்தில் பயிற்சி பெற்றுக்கொண்டிருக்கும் இவர் சென்னையிலிருந்து ஒரே யடியாக திருவனந்தபுரத்திற்குப் பறந்து சென்றார். இவ்வாறு போன முதல் விமானயோட்டி இவரே. திருவனந்தபுரத்தில் இவர் தங்கியபோது மகாராஜாவும், மகாராணியும் பாராட்டினார்கள்.

—P. P. B.

வாசகர்காள்! இந்தக் கற்பனையைச் சற்று சிந்தித்துப் பாருங்கள்! புலவர் தமயந்தி வதனத்திற்குக் கொடுக்கும் பிரகாசத்தையும், பொன்மையையும் என்ன வென்று சொல்வது! சந்திரனில் காணப்படும் கருப்பு நிறத்திற்குப் புலவர் சொல்லும் சாதுரியக் கற்பனையை மெச்சாதிருக்க முடியுமோ!

கபோலம் (நெற்றி)

வேனில்வேள் வனப்பு
நோக்குதற் கமைத்த
விளங்கு கண்ணடியோ!
[ஒளிரும்
பானலங் கண்வாள்
தீட்டிய கிடந்த
சாணையின் படிவமோ
கபோலம்!

இந்த இரண்டடிகளும் தமயந்தியின் நெற்றியின் இயல்பைக் குறிக்கும் பொருட்டு நம் புலவர் உபயோகிப்பவைகளாகும். அவர் தமயந்தியின் நெற்றியைத் தியானித்ததும் அதற்கு உவமையாக ஒரு பொருளைச் சொல்ல முடியவில்லை. அதன் பிரகாசம், நேர்மை, களங்கமற்ற தன்மை யென்பன வெல்லாம் அவர் மனத்தையே கலக்கி விடுகின்றன. உடன் "மன்மதனானவன் தன்னுடைய அழகைப் பார்ப்பதற்காக நிறுவியிருக்கும் பிரகாசம் பொருந்திய ஒரு கண்ணடியோ! அல்லது பெண் நலம் குன்றாத சிறப்புடைய அவளது கண்ணாகிய வாளைத் தீட்டிக் கொள்வதற்காக அதன் சமீபத்தில் வைக்கப்பெற்றிருக்கும் ஒரு சாணையின் சித்திர ரூபமோ!" என்று ஐயறுகிறார். இந்த விடத்தில் வாசகர்கள் தமயந்தியின் நெற்றியைக் கண்ணடியாகக் கொண்டிருப் பவன் யாவனென்றும், கண்ணாகிய வாளைத் தீட்டுவதற்காக அதன் பக்கத்திலேயே சாணைவைக்கப் பட்டிருப்பதாகக் கூறும் அழகையும் சிந்திக்க! பெண்களின் கண்கள் ஆடவரின் நெஞ்சைப் பிளந்து கொண்டு போவதால் அவற்றை வாளெனக் கூறுவது மரபு. அதனை அடிப்படையாக வைத்துக்கொண்டுதான் புலவர் அதற்கு ஒரு சாணையைப் படைக்கிறார்! என்ன கற்பனா சக்தி! அப்பால் கண்ணடியாக நெற்றியை உருவகப் படுத்த வேண்டு மென்றால் அதன் பிரகாசமும் பரிசுத்தமும் எத்தன்மையனவாக இருக்கவேண்டும்!



---

# மகாத்மா தேக அசௌக்கியம்

---

டிசம்பர் 4-ந் தேதி மாலை பிரார்த்தனை சமயத்தில் மகாத்மா காந்தியடிகளுக்கு திடீரென்று மயக்கமும் தலைப் பளுவும் ஏற்பட்டன. வார்தாவிலிருந்து இந்தச் செய்தி கிடைத்ததும் நாகபுரியிலிருந்து டாக்டர் கிரே விரைந்து சென்று மகாத்மாவை பரீட்சித்தார். நான்கு தினங்கள் வரையில் பூரண ஓய்வுவெடுத்துக் கொள்ளுமாறு அவர் ஆலோசனை கூறினார். பின்னர் வந்த செய்திகளிலிருந்து மகாத்மாவின் தேகநிலை கவலைக்கிடமில்லையென்று தெரிகிறது.

மகாத்மாவின் உடல்நிலை திடீரென்று இப்படி யானதற்குக் காரணம் அவர் 'ஸோயாபீன்' என்ற மொச்சை ஆகாரம் உண்டு பரீட்சை பார்த்ததேயாகும். சூரிய ரச்மியில் அதிகம் இருந்ததும் அதிக வேலையிலீடுபட்டதும் கூட அவர் உடல் நிலைக்கு தீமை விளைவித்தனவாம்,

# திரு. சொக்கலிங்கம் சொர்ணவல்லி சீர்திருத்த மணம்

நாளது கார்த்திகை மாதம் 21-ம் நாள் வெள்ளிக்கிழமை யன்று சிறுவயல் அ. சொக்கலிங்கம் அவர்களுக்கும் நெற்குப்பை மு. சொர்ணவல்லியாருக்கும் பட்டமங்கலத்தில் சீர்திருத்தத் திருமணம் வெகு சிக்கனமான முறையில் ஒரே நாளையில் நடைபெற்றது. மாப்பிள்ளை இளுப்பைக்குடிக் கோவிலையும் மணமகள் இளைய வகையில் நேமங் கோவிலைச் சார்ந்தவருமாவார்கள். மாப்பிள்ளையின் சொந்தக்காரர்கள், சிறுவயல்—நாச்சியார்புரம், பங்காளிகள் பூராவும் வந்திருந்தனர். பெண் வீட்டாரின் சொந்தக்காரர்கள், பங்காளிகள், எல்லோரும் வந்திருந்தனர். வேறு பல அன்பர்களும் விஜயம் செய்திருந்தனர். பகல் உணவு எல்லோருக்கும் வழங்கப் பெற்றதும் திருமண வைபவம் ஆரம்பமானது. அலவாக்கோட்டை ஸ்ரீமான் பி. நா. சொக்கலிங்கம் செட்டியார் பனைவியார்—விசாலாட்சி அவர்கள் தியாகராஜ கீர்த்தனையும் தேசிய கீதமும் பாடினார்கள். இந்த சபைக்கு தேவகோட்டை ஸ்ரீமான் சேவு. லெ. ராம. நாராயணன் செட்டியார் அவர்கள் அக்கிராஸனம் வகித்தார்.

பிறகு மணமகன் மணமகளுக்கு திருமாங்கல்யதாரணம் செய்து மாலை அணிவித்தார். மணமகள் மணமகனுக்கு மாலை அணிவித்தார். இந்தச் சிறந்த முறையான திருமணத்தைப் பாராட்டி இதனால் சமூக மக்களுக்கு எத்தனை நலமுண்டாகும் என்பதை நன்கு விளக்கிப் பேசி தம்பதிகளுக்கு வாழ்த்துக் கூறியவர்கள் வருமாறு:—

ஸ்ரீமான் பி. நா. சொக்லிங்கம் செட்டியார் (அலவாக்கோட்டை) ஸ்ரீமான் கண. முத்தையா செட்டியார் (மதகுபட்டி) ஸ்ரீமான் மு. சோமசுந்தரம் செட்டியார் (சிறுவயல்) ஸ்ரீமான் சொ. முருகப்பா செட்டியார் (அமராவதி புதூர்)

பின்னர் அக்கிராஸனர் முடிவுரை கூற மணமகன் அனைவருக்கும் வந்தனம் கூறினார். ஸ்ரீமான் மு. சோம. அவர்கள் வந்திருந்தவர்களுக்கும் கலியாணத்தில் ஒத்துழைத்து ஒத்தாசை



சென்ற வாரம் பிள்ளையார்பட்டியில் நடைபெற்ற சீர்திருத்த மணத் தம்பதிகள் பரமசிவம். செளந்தரம்.

## தமயந்தி-சிதம்பரம் மலாயா விஜயம்

சமீபத்தில் தஞ்சையில் திருமணம் செய்துகொண்ட திரு. சித. சோம. சிதம்பரம் செட்டியாரவர்களும் மாயூரம் ஸ்ரீமதி தமயந்தியும் காரைக்குடி, கொழும்பு மார்க்கம் 21-11-35-ந் தேதியன்று பினங்கு சென்று சேர்ந்தார்கள். அன்று காலை 6 மணிக்கு நண்பர்கள் பலரும் மலாயா இளைஞர் சங்கத்தாரும் குதூகலமாக வரவேற்றார்கள். திருவாளர் பெ. நா. மு. முத்துப்பழனியப்ப செட்டியார் அவர்கள் ஜே. பி. தம்பதிகளுக்கு மாலை யணிவித்தார்கள். ஹார்பரிலிருந்து நண்பர்களுடன் எலிஸி ஹோட்டலுக்கு வந்து தங்கியிருந்தார்கள். 22-11-35 மாலை 5 மணிக்கு இந்தியன் அசோசியேஷன் கட்டிடத்தில் மலாயா இளைஞர் சங்கச் சார்பால் ஓர் உபசாரக் கூட்டம் நடைபெற்றது. இரங்கூன் தனவணிகன் ஆசிரியர் திரு. அ. கருப்பன் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். திரு மு. காசிநாதன் செட்டியாரவர்கள், திரு. கா. கு. குப்பன் செட்டியாரவர்கள், திரு. அரு. வீர. அருணாசலம் செட்டியாரவர்கள் தம்பதிகளைப் பாராட்டிப் பேசினார்கள். அதற்கு திரு. சிதம்பரமும் ஸ்ரீமதி தமயந்தியும் தக்க பதிலளித்த பின்னர் தலைவர் கலப்பு மணத்தைப் பாராட்டிப் பேசினார். வந்தனோபசாரங் கூறப்பெற்று மாலை 6-30-க்கு கூட்டம் முடிவெய்தியது. 23-11-35 காலை மெயிலில் தம்பதிகளிருவரும் ஈப்போவுக்குப் பிரயாணமானார்கள்.

### ஈப்போவில் வரவேற்பு

23-11-35 பகல் மெயிலில் பினங்கிலிருந்து திரு. தமயந்தி சிதம்பரம் தம்பதிகள் ஈப்போவுக்கு வந்தார்கள். ஸ்டேஷனில் ஏராளமான தனவணிகர்களும் மற்ற அன்பர்களும் குதூகலமாக வரவேற்றார்கள். திரு. மெ. செ. ச. வீரப்ப செட்டியாரவர்கள், தம்பதிகளுக்கு மாலை யணிவித்தார்கள். மெர்க்கண்டைல் பிரஸ் தொழிலாளர்களின் சார்பாக திரு. தங்கராஜ் மாலை யணிவித்தார். பின்னர் நண்பர்களுடன் அவர்களுக்காக ஏற்பாடு செய்திருக்கும் ஆண்டர்சன் ரோட்டு வீட்டிற்கு வந்து சேர்ந்தார்கள்.

### தேநீர் விருந்து

30-11-35-ல் மாலை 4-30 மணிக்கு ஈப்போ செட்டியார் நண்பர்களால் பேராக்சைனீஸ் சேம்பர் ஆப் காமர்ஸ் கட்டிடத்தில் ஒரு தேநீர் விருந்தளிக்கப் பெற்றது. மலாயா இளைஞர் சங்கத் தலைவர் பினங்கு திரு. எம். கே. நாதன் அவர்கள் தலைமை வகித்தார்கள். விருந்திற்கு உள்ளூர் தனவணிக அன்பர்களும், கவர்ன்மெண்ட் உத்யோகஸ்தர்களும் பெண்மணிகளும் கம்பார், கோலக்கஞ்சார் பினங்கு கோலாலம்பூர் முதலிய ஊர்களிலிருந்து நண்பர்களும் சுமார் 150 பேர்கள் விஜயம் செய்தனர். ஹால் மிக அழகாக அலங்கரிக்கப் பெற்று உயரிய முறையில் விருந்தளிக்கப் பெற்றது. தலைவருக்கும் முக்கிய விருந்தினர்களுக்கும் திரு. மெ. செ. ச. வீரப்பசெட்டியாரவர்களால் மாலையணிவிக்கப் பெற்றது. தலைவர் முகவுரைக்குப் பின்னர் திரு. வீர. பழ. மு. கருப்பன் செட்டியாரவர்களால் ஈப்போ செட்டியார் நண்பர்களின் சார்பாக திரு. தமயந்தி-சிதம்பரம் அவர்கட்கு வாழ்த்துப் பத்திரம் படித்துக் கொடுக்கப் பெற்றது. ஸ்ரீமதி நீலா ஜயராம் அவர்கள் "காதல் மணம்" என்பதுபற்றியும் ஆண்டர்சன் ஸ்கூல் உபாத்தியாயர் திரு. S. ராஜரத்தினம் அவர்கள் மனைவிமாரை உடனழைத்து வரவேண்டிய அவசியத்தைப் பற்றியும் பேசினார்கள். பின்னர் விருந்தினர்கள் இருவரும் தக்க பதில் அளித்த பின்னர் தலைவர் முடிவுரை கூறினார். சிங்கப்பூர், மலாக்கா, சிரம்பான், கிள்ளான், கோலாலம்பூர், டெலுக் அன்சன் முதலிய ஊர்களிலிருந்து விருந்திற்கு வர முடியாத நண்பர்களிடமிருந்து வந்த வாழ்த்துக் கடிதங்கள் தந்திகள் திரு. அழ. அருணாசலன் அவர்களால் வாசிக்கப் பெற்றது. திரு. மு. நா. மு. மெ. மாணிக்கம் செட்டியாரவர்களால் விருந்தினர்களுக்கும் தலைவருக்கும் மற்ற நண்பர்களுக்கும் செட்டியார் நண்பர்களின் சார்பாக வந்தனங் கூறினார்கள். மாலை 6 மணிக்குக் கூட்டம் நிறைவேறியது.

(ஒரு நிருபர்)

செய்த அனைவருக்கும் நன்றி கூறினார்கள். வெகு சந்தோஷமாக கூட்டம் நிறைவெய்தி அன்றையத் தினமே பெண்ணை சிராவயலுக்கு அழைத்துக் கொண்டார்கள் என ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

---

## :: காங்கிரஸ் :: சரித்திரம்

திரு. எம். எஸ். சுப்பிரமணிய ஐயர், விரிவாயும், அழகாயும் எழுதியது. வழ வழப்பான காகிதத்தில், காங்கிரஸ் தலைவர் படங்களுடன் விரைவில் வெளி வரும். இப்போதே எழணா (0-7-0) தபால் தலை அனுப்புவோர்க்கு, ஒரு புத்தகம் வெளி வந்தவுடன் அனுப்பப்படும்.

ஒரே காலத்தில் அதிகப் பிரதிகள் ஆர்டர் செய்வோர்க்கு பிரத்தியேக ரேட்.

:: அல்லயன்ஸ் கம்பெனி, ::
மைலாப்பூர், சென்னை.

---

### லைசென்ஸ் இல்லாமல் பெட்ரோல் கொண்டுபோனதற்கு அபராதம்

இந்த மாதம் 5-ந் தேதி லைசென்ஸில்லாமல் சென்னையிலிருந்து 554 காலன் பெட்ரோலை இராயபுரம் வழியாக கூடலூருக்கு ஒரு மோட்டார் பஸ்ஸில் கூடலூர் வாசியான என். கோபாலன் கொண்டு போனதாக தீர்ப்புசெய்து இன்று இரண்டாவது பிரஸிடென்ஸி மாஜிஸ்திரேட் திரு என் கேர்யில்பிள்ளை எதிரிக்கு 50 ரூபா அபராதம் விதித்தார். அபராதம் கொடுக்கத் தவறினால் குற்றவாளி ஒருவாரம் கடுங்காவலிலிருக்க வேண்டுமெனவும் உத்தரவிட்டார். தான் குற்றவாளியென்று எதிரி ஒப்புக் கொண்டார்.






(முன் வாரத் தொடர்ச்சி)

(இ. சிவம்)

### VII

சென்றவாரம் நான் 'மிஸ் 1950' யைப் பற்றிக் கூறத் தொடங்கி திடீரென விட்டுவிட்டேன். காரணம் வாசகர்களை திணறவைக்க வேண்டுமென்ற எண்ணமல்ல. எழுதிக் கொண்டே இருந்தபோது பேனாவில் மை திடீரென நின்றுவிட்டது. பின் வேறு மை யடைத்துக் கதையைத் தொடரலாமென்றால் கம்பாசிட்டர் வந்து உறுத்திய வற்புறுத்துக் கொஞ்சமல்ல. உடன் "வாசகர்களிடம் மன்னிப்புக் கேட்டாலும் கேட்டுக் கொள்ளலாம்; இந்த கம்பாசிட்டர்களோடு மல்லுக்கு நிற்க வேண்டா" மென்று கருதி 'தொடரும்' என முடித்துக் கொடுத்துவிட்டேன். இந்த வாரம் பேனாவில் ஜாக்கிரதையாக மை யடைக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் நிச்சயமாகவும் கதை முழுவதும் எழுதியே முடித்துவிடுகிறேன். நிற்க,

மூன்று நான்கு வாரமாக, சேத்தூர் வனிதாஸ்ரமத்தை விடாது படித்து வரும் நண்பர் ஒருவர், "சார், மிஸ் 1950 என்றால் அர்த்தமென்ன, அர்த்தமென்ன?" என்று பஞ்சரிக்கிறார். அப்படியே பல நேயர்கள் கேட்க ஆசைப்பட்டாலும் படலாம். நானும் அதுபற்றி கூறியிருக்க வேண்டுவது அவசியமன்றோ? நல்லது. மிஸ் 1950 என்று சொன்னேனே ஒரு பெண், அவளிடம் நவநாகரிக (அநியாய)ங்கள் அபாரம். நவநாகரிகங்கள் மட்டிலுமல்ல; எதிர்கால நாகரிகங்களும் 'டன்' கணக்கில் புகுந்து இடம் பிடித்திருந்தன. 1950-வது வருடத்தில் என்னென்ன நாகரிக (ப்படுமோச)ங்கள் இந்த நாட்டுப் பெண்களைக் கைப்பற்றலாமோ அவ்வளவும் நம் கதை நிகழ்ந்த காலத்திலேயே அவளிடம் வந்து விட்டன. இதனை வேறு பாஷையில் கூறினால் மற்ற தமிழ்நாட்டுப் பெண்களைவிட இவள் சுமார் நாற்பது வருடங்கட்கு 'அட்வான்சாக'ப் போய்க்கொண்டிருந்தாள் என்று சொல்லல் வேண்டும். இவளுடைய உண்மைப் பெயர் நான் மேலே கூறியவாறு பார்வதி. அதனை சிலபோழ்து பார்வதிபாய் என்று செம்மைப்படுத்திக் கொள்வாள்; சிலபோது பார்வதி அம்மாள் என்று திரித்துக்கொள்வாள்; சிலபோழ்து பர்வதம்மாள் என்று வளைப்பாள். ஒரு விசிட்டர் மிஸிஸ் பார்பத் (Parbat) என்று ஆங்கிலப்படுத்திக் கொடுத்தாராம். அதனையும் பெருமையுடன் சூட்டிக்கொள்வாள். இப்படிப்பட்ட அவளது ஒய்யாரங்களையும், அவற்றோடு அவளது நடை, உடை, பாவனை, தளுக்கு, வெட்டு, கை வீச்சு, உடலசைப்பு முதலியவைகளையும் நினைத்தால் ஆ! ஆ! எனக்கு அவளை பார்வதி யென்றே அழைக்கத் தோன்றவில்லை. அதுபற்றியே மிஸ். 1950 என்று கதை நெடுக எழுதிக்கொண்டு வந்துவிட்டேன்.

அவளுக்கு சுமார் 37 வயதிருக்கும். நிதானித்துக் கூறினால் தாசித் தொழிலிருந்து பென்ஷன் வாங்கிக்கொண்டு எங்காவது ஒரு சுகாதார நிலயத்தில் (Sanatoriums) போய் ஓய்வெடுத்துக் கொண்டிருக்க வேண்டிய பக்குவம். ஆனால் (!) 'கிழவா பழைய ஆவல்' என்பதற்கிணங்க தன் தொழிலை விடாது நடாத்திக்கொண்டிருந்தாள்.

அவள் தொழில் சந்திரா முதலியாருடன் திருக்குற்றாலம் போனது வரையிலும் செவ்வையாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. சந்திரா பிரிந்ததும் யாரும் வருவதில்லை. ஆதலால் வருமானம் குன்றி, அதனால் மனமுடைந்து, ஆசையால் உடல் தளர்ந்து, எனவே திண்டாடலானாள். இந்தத் திண்டாட்டம் அதிகப்பட அதிகப்பட தன்னை அதிக முறுக்காக்கிக் கொள்வதற்காக ஹேர் ஆயில்கள், டானிக்குகள், ஸ்நோக்கள், பேஸ் பவுடர்கள், பவுடோபின்கள்; நாகரிக பாடிகள், ஜாக்கட்டுகள் என்னென்ற எத்தனையோ வித கந்தல்கள், களிமண்கள், விளக்கெண்ணெய்கள், சுண்ணாம்புப் பொடிகளை யெல்லாம் துணைகோலிப் பார்த்தாள்; பிரயோசனப்படவில்லை. தசையில் இரத்தம் வற்றிய பிறகு எதை வாரிப் பூசினால்தானென்ன? கிழவனுக்கு கோட்டும் சட்டையும் போட்டால் புது மாப்பிள்ளை யாகிவிடுவானா? 'பழைய குருடி கதவைத் திறடி' என்றபடி பார்வதியின் காசு பறந்ததே யல்லாது பயனெதுவு முண்டாகி விடவில்லை. நாளுக்கு நாள் அவள், தன் கண்ணுக்கும் ஊரார் கண்ணுக்கும் கீழ்நோக்கியே போகலானாள். இந்தக் கீழ்நோக்கிப் பிரயாணத்தில் அவளுக்கு ஏற்பட்ட அவமானமும் பண நஷ்டமும் கொஞ்சமல்ல. சற்று 'ஆள் முறுக்காக' இருந்த போதெல்லாம் காதற் பார்வை பார்த்த 'ஆசாமிகள்'

அனைவரும் கொஞ்சம் தளர்ந்து, 'கை கெட்டதும்' பரிஹாசம் செய்யத் தொடங்கி விட்டார்கள். அக்காரணம் பற்றி குல ஸ்திரீபோல் நடித்துக் கொள்ள முடியாது போயிற்று. அன்றி அதுகாறும் பம்மிப் பதுங்கியிருந்த மேகம், வெட்டை, கரந்தி, பொரிவு முதலிய அமூல்ய ரத்தினங்களெல்லாம் ஒன்றாக அவளது திருமேனியை அலங்கரிக்கவும் தொடங்கின. அதோடு கையில் காசுமில்லை யல்லவா? ஆகவே திண்டாட்டம், திகைப்பு, நிர்க்கதி, அநாதரவு முதலியன வெல்லாம் வந்து அவளைப் பற்றிக்கொள்ள, அவற்றைத் தொடர்ந்து வந்த மானசிக, சாரீர அரிப்பும் சேர்ந்து அவளை நெருப்பி லிட்டு வாட்டியதுபோல் வாட்டலாயின. அதிகமேன்? அம்மாள் பார் வதி பிராட்டி—சுமார் 40 வயது வரை தண்டையார் பேட்டை இளைஞர்களைக் கெடுத்த பாக்கியவதி—தன்னை அபய மென்றடைந்த இளம் பெண் சந்திரா வைத் தொலைத்த புண்ணியவதி—உரிய காலத்தில் ஜெனரல் ஆஸ்பத்திரியைச் சரணடைந்து, அழுவாழும் அடிப்பாரு மற்று சில தோட்டிகள் தோள் மேலேறி மறு உலகத்திற்குப் பிரயாணமானாள்!

பாவம்! பசித் தொழிலுக்கு வந்த தட்டழிவைப் பார்த்தீர்களா? இந்த மிஸ் 1950 அந்தக் காலத்தில் என்ன தடபுடலாக விருந்தாள் தெரியுமா? ஒப்பாரு மிக்காருமில்லை என்று மதித்து நடக்கும் சிங்கம் போல் இயங்குவாள். முகத்தைத் தாழ்த்தி கடைக்கண்ணால் ஒரு பார்வை பார்த்துவிட்டாளென்றால் ஒன்பது பேருடைய இருதயம் ஒன்றாக தொளைவிழுந்துவிடும்! உடம்பை ஒரு வெட்டு வெட்டினாளானால் உலகமே ஒடிந்து விடுமோவென்று சந்தேகம் தோற்றும். அத்தகைய ஒருத்தி ஆ! ஜெனரல் ஆஸ்பத்திரியில் அநாதிப் பிணமாக மாய்கின்றாள்! இதுதான் புருஷன் பிள்ளைகளோடு வீட்டில் அடங்கி வாழாதவர்கட்கு ஏற்படும் கதி..............!

நல்லது. இந்த சௌபாக்யவதி சரச ஒய்யார சிங்கார லகரி பார்வதியை ஆட்கொண்டிருந்தாரே ஒரு புண்ணியவான், அவர் கதியென்ன வென்று கேட்பீர்களன்றோ? ஆம்—அப்புருஷர் தம் திருவிளையாடல்களின் தேவையில்லாமலான பிறகு—அதா வது மனைவியின் தொழிலுக்குப் பொது ஜன ஆதரவில்லாமல் போனபிறகு—வறுமை என்ற உபதேசகரும் அவமானமென்ற ஆசிரியனும் புத்தி கற்பித்ததால் கடவுள் ஞானம் பிறந்து, சந்நியாசம் பூண்டு, காவி வேஷ்டியுடன் தீர்த்த யாத்திரை செய்யலானார். அந்த யாத்திரையில் அவர் திருவொற்றியூரை நாடியதும்—அவரும் ஒரு பட்டணத்தாராகி விட்டார் போலும்—முத்தியடைந்துவிட்டார். ஆனால் பட்டணத்தார் முத்திக்கும் இவர் முத்திக்கும் சில வித்தியாசங்களுண்டு. பட்டணத்தார் தாமாக முத்தியுற்றார்; இவரோ முத்திபெற வற்புறுத்தப்பட்டார். பட்டணத்தார் தாழிக்குள் மறைந்தார்; இவர் தெப்பக் குளத்தில் மிதந்தார். பட்டணத்தார் உடம்பு சிவலிங்கமாயிற்று; இவருடம்பு நாறலாயிற்று. பட்டணத்தார் உடம்பைப் பூசித்தார்கள்; இவர் உடம்பைப் 'போஸ்ட் மார்ட்டம்' செய்தார்கள். இறுதியில் பட்டணத்தாரைப் பற்றி பண்டிதர்களால் கதை யெழுதப்பட்டது; இவரைப் பற்றியோ போலீசாரால் யாதாஸ்து எழுதப்பட்டது. இப்படிப்பட்ட சிலவற்றைத் தவிர இருவருக்கும் வேறு வித்தியாசமில்லை. கடைசியாக ஒரு வித்தியாசத்தை மட்டிலும் கூறலாம். அதாவது பட்டணத்தார் சரித்திரத்தை சினிமாப் படமாகப் பிடித்துவிட்டார்கள்; இவரைப் பற்றி அப்படி செய்யவில்லை. ஆனால் நான் சினிமாவுக்கு இவரது சரித்திரம் பட்டணத்தார் சரித்திரத்தை விட பல்கோடி மடங்கு பிரயோஜனமானது என்று கூறுவேன். இவர் கதை பட்டணத்தார் சரித்திரத்தை விட ரசமாகவும், போதனை நிறைந்தும், நவீன சினிமாவுக்கு ஏற்றதாகவும், நவீனமாகவு மிருக்கும். ஆனால் சினிமாக்காரர்கள்தான் புராணக் கதைகளை விட்டுவிட்டு இதுபோன்ற சரித்திரங்களை நாடமாட்டார்களே; அதற்கென் செய்யலாம்!

நண்பர்காள்! இனி கதையைத் தொடர்ந்து செல்வோம். சந்திரா தென்காசியில் சில வருடங்கள் தங்கிக் கொண்டிருந்தாள் என்று சொன்னேனன்றோ? அங்கு அவளுக்கு தனியாக உண்டுண்டு உறங்கிக் கொண்டிருக்கப் பிடிக்கவில்லை. தன்னிடம் ஏராளமாயிருக்கும் பணத்தையும் தன் சக்தியையும் தேச நன்மைக்காகச் செலவிட வேண்டுமென்று நினைத்தாள். அதே போழ்து என்னைத் தேடி என் உபதேசத்தைப்பெற்று என்னோடு உறவாடி உய்ய வேண்டுமென்றும் ஓர்ந்தாளாம். ஆதலால் ஒரு தீர்த்தயாத்திரையாகப் புறப்பட்டாள். திருக்குறுங்குடி (நம்மாழ்வார் சென்றவிடம்) திருநெல்வேலி, ஆழ்வார் திருநகரி (காளமேகப் புலவரின் பெருமை கண்ட இடம்) எட்டையாபுரம் (பாரதியார் பிறந்த விடம்) மதுரை, திருவாதவூர் (மாணிக்கவாசகர் பிறந்த விடம்), வேம்பத்தூர் (வேம்பத்தூர் கவிராயரை ஈன்ற விடம்) ராமேஸ்வரம், பழனி (மாம்பழக் கவிராயர் பிறந்த விடம்) உடுமலைப்பேட்டை (முத்துச்சாமிக் கவிராயர் பிறந்தவிடம்) திருச்சி (மகாவித்வான் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை) தஞ்சை (கரந்தைத் தமிழ் சங்கம் முளைத்த விடம்) திருவாவடுதுறை (யேலகரம் சுப்பிரமணிய தேசிகர் வாழ்ந்தவிடம்) சீர்காழி (திருஞானசம்பந்தர் தோன்றிய விடம்) மைலாப்பூர் (திருவள்ளுவர் பிறந்த விடம்)



பொன் விளைந்த களத்தூர் (புகழேந்தி பிறந்த விடம்) முதலிய ஊர்கள் வழியாக இந்தியா முழுதும் செல்லவேண்டுமென்பதே அவளது திட்டம். அத் திட்டத்தோடு புறப்பட்ட அவள் பல ஊர்களில் தர்மங்களும் செய்தாளாம். தர்மமென்றால் பத்து ஏக்கர் விஸ்தீர்ணத்திலிருக்கும் கோவிலை 15 ஏக்காக வளர்ப்பதோ, 1000-க் கால் மண்டபத்தை ஆயிரத்து ஒரு கால் மண்டபமாக மாற்றுவதோ, புதுப்புது சிவ லிங்கங்களை நிருமிப்பதோ அல்லது அரச மரமும் பிள்ளையாரும் அமைப்பதோ, நகைகளைச் செய்து சாமிகட்குச் சூட்டுவதோ அல்ல. கதியற்ற நோயாளிகள் எங்கிருக்கின்றார்களென்று தேடிப் பிடித்து, அவர்கட்கு வைத்திய உதவி அளிப்பதே சந்திரா புரிந்த சாரமுள்ள தர்மம். நான் அவள் வரலாற்றைக் கேள்விப்பட்டதிலிருந்து எத்தனையோ நோயாளிகட்குச் சமயசஞ்சீவியா யிருந்திருக்கின்றாளென்று தெரிந்து கொண்டேன். இதனை நினைக்கில்,—இக்காலத்தில் சிலர் பெரிய தேசாபிமானிகளென்றும், சத்யாக்கிரகிகளென்றும், சமதர்மவாதிகளென்றும் கூறிக்கொண்டு ரோட்டில் விழுந்து கிடப்பவனையோ, கத்தியால் குத்தப் பெறுகின்றவனையோ, நோயினால் தொல்லைப்பட்டுக் கொண்டிருப்பவனையோ ஏறெடுத்தும் பாராமல் போகிறார்களே, அவர்கள் நாட்டன்பை என்னவென்று சொல்வது? அந்தோ! பெரிய தியாகிகளென்று கூறிக்கொள்ளும் இவர்கள் சர்க்காரோடு போராடுவதற்கோ மகாநாட்டில் கலாட்டா செய்வதற்கோ, தேர்தலில் சண்டை போடுவதற்கோ தான் தொண்டர் படை திரட்டுகிறார்களே யன்றி, நோயினால், பட்டினியால், வேலையில்லாத் திண்டாட்டத்தால், நடுரோடில் தங்கள் வீட்டுவாசலில் கொல்லையில் அலறிக்கொண்டிருக்கும் கதியற்றோர்களைக் கவனிக்க தொண்டர் படை திரட்டுகின்றார்களில்லையே. இப்படிப்பட்ட குணம் என்ன தேச ஊழியமா? சமூகத் தொண்டா? தியாகமா? நமது தேசத்தில் சதா வீழ்ந்தார்க்கு உதவும் தொண்டர் படையிருக்குமாயின் அதுவே ஒரு தனி யின்பமாகுமன்றோ? இந்தப் புத்தி நம் தேசாபிமானிகட்கு எப்போது வரும்?

எனது சந்திரா—என்—நமது சந்திரா—நான் மேலே வேண்டிய தேசத் தொண்டர்கள் இனத்தைச் சேர்ந்தவளாவாள். ஆகையால் போன போன விடங்களிலெல்லாம் பலருக்கு உதவி புரிந்தாள்.

ஒருமுறை, திருவண்ணாமலைக்குப் போயிருந்தபோது, ஒரு ஆச்சரியமான தொண்டு நிகழ்ந்தது. அங்கு ஒரு சத்திரத்தில் (சந்திரா) தங்கிக்கொண்டிருந்தாளாம். ஒருநாள் மாலை சுமார் 6 மணிக்கு சூரியன் அடையப் போகும் போது, இரண்டு பிச்சைக்காரிகள் சத்திரத்து மூலையொன்றில் அழுக்குத் துணிகளைப் போர்த்திக்கொண்டு கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார்களாம். அவர்களின் பக்கத்தில் ஒரு அழுக்கு மூட்டை கிடந்ததாம். அதனை பிச்சைக்காரிகள் அடிக்கடி உற்றுப் பார்த்துக் கொண்டு கண்ணீர் வடித்தார்களாம். அதனைப் பார்த்ததும் காருண்ய வடிவமான சந்திராவின் மனம் பொறுக்க முடியவில்லை. உடன் தன் மேலான விடத்திலிருந்து பிச்சைக்காரிகள் இடத்திற்கு இறங்கிப் போனாள். போனதும் ஆறுதல் தரும் பார்வையோடு அன்பான மொழிகளில் 'ஏன் அழுகிறீர்கள்?' என்றாள். பிச்சைக்காரிகள் அழுக்கு மூட்டையைக் காண்பித்துக் கொண்டு, "இதோ இந்த அம்மாள் பிணமாகிக் கொண்டிருக்கிறாள்; உதவி செய்ய எங்களிடம் கதியில்லை" என்றார்கள். எனவும் சந்திரா "என்ன? இது ஒரு அம்மாளா? நான் அழுக்கு மூட்டை என்றல்லவோ நினைத்தேன்?" என்று கூறிய வண்ணமே கையினால் அதனை மூடியிருந்த துணியை அகற்றினாள். ஆம்! உண்மையில் அது ஒரு பெண் தான். எத்தனை வருடமாக என்னென்ன தரித்திரத்திற்கு ஆளானாளோ? என்னென்ன நோய்கள் எவ்வெவ்வ காலத்தில் பிடித்து வாட்டினவோ? அவள் மெலிந்து ஒரு பத்து வயது குழந்தை போல் குறுகித் துவண்டிருந்தாள். உயிர் 'போகவா இருக்கவா' வென்று யோசித்துக் கொண்டிருந்தது. குளிர் வாட்டியது. அந்தப் பரிதாப நிலைமையைக் கண்டதும் கண்கலங்கிய நம் அருமை சந்திரா அழுக்குத் துணிகளை அகற்றி தன் நல்ல வஸ்திரமொன்றைப் போர்த்து [illegible] பளியில் படுக்க வைத்து [illegible] யில் ஒரு டம்ப்ளரை ஊட்டினாள். அங்கு யிருந்த பிச்சைக்காரிகட்கும் உதவி செய்யப்பட்டது. அப்பால் மெதுவாக தன் அறைக்கு நோயாளியை எடுத்துச் சென்று ஒரு டாக்டர் உதவியால் சிகிச்சை செய்தாள். சிகிச்சிக்கவும் —சௌகரிய மென்பதையே காணாத பழம் பிச்சைக்காரிக்கு [illegible] உதவி கிடைத்தால் [illegible] கும்? அவள் அன்றைக்கே மூன் காலே அரைக்கால் முக்கால் [illegible] உயிரைப் பெற்றுவிட்டாள். பின் ஒரு வாரத்திற்குள் முழு சௌகரியத்தையும்

அடைந்தாள். அதன்மேல் அவள் உடம்பு வளம் செய்யப்பட்டது. அதுவும்—போதுமான போஷணையின்றி மெலிந்து போனது உடம்புதானன்றோ?—ஒரு மாதத்திற்குள் பயனளித்துவிட்டது. விடவும் ஒரு பெரிய ஆச்சரியம்! அந்தோ நோயாளி சந்திராவைக் காணக்காண திணறத் திணற விழிக்கலானாள். சந்திராவுக்கு அதனைக் கண்டதும் பெரிய சந்தேகம். கடைசியில் பூரண சுகம் ஏற்பட்டதும் சந்திரா "அம்மா நீ யார்? எந்தவூர்? உனக்கு சுற்றமில்லையா?" என்று கேட்கத் தொடங்கினாள். தொடங்கவும் அவளுக்கு வந்த திண்டாட்டம் கொஞ்சமல்ல. ஏன் தெரியுமா? அந்த நோயாளிதான் கோமளம்! அதாவது எந்தப் பெண்ணினுடைய புருஷன் சந்திராவைத் தீண்டினானோ—அல்லது யார் ரங்கநாதம்பிள்ளை என்பவனோடு ஓடினாளோ அந்தப் பெண்ணே அவள்! அவளைக் கண்டால் சந்திராவுக்கு எப்படி இருக்கும்? வெட்கம், இரக்கம், அன்பு எல்லாம் சேர்ந்து அவளைப் படாதபாடு படுத்தின. கோமளமும் தன் புருஷனின் ஆசைக் காதலியான சந்திராவே தனக்கு உதவியானாள் என்று தெரிய, அல்லோல கல்லோலப் பட்டாள்! அழுதாள்; விம்மினாள்; தயங்கினாள்; தன் பண்டைய வாழ்க்கையையும் பாசம் மிக்க பர்த்தாவையும், பாவி ரங்கநாதனையும் பாவை சந்திராவையும் நினைந்தாள்! அவளுக்கு தன் புருஷனை கெடுத்தாளே சந்திராவென்று சொல்லத் தோன்றவில்லை. ஏனெனில் சந்திரா தானாக முதலியாரை இழுத்துக் கொள்ளவில்லை யென்பதையறிவாள். அதோடு அவளும் ஒழுங்காக வீடடங்கி யிருக்கவில்லை யல்லவா? ஆதலால் அழுது கொண்டே இருந்துவிட்டாள் கோலங்கெட்ட கோமளம்.

இதற்குள் சந்திராவோ திகைத்துக் கண்ணீர் வடிய, கோமளத்தின் பாதத்தையே நோக்கியவளாகி இருந்துவிட்டாள். அவள் உள்ளத்தில் மேனாள் கோமளம் வாழ்ந்த வாழ்க்கையும், அவளும் முதலியாரும் சுகித்திருந்ததும் எல்லாம் நினைவுக்கு வந்தன. ஒருகால் தான் அவள் புருஷனை எடுத்துக் கொண்டதற்காக சினங்கொள்வாளோ வென்றும் சந்தேகித்தாள். ஆனால் நான் மேற்சொன்ன காரணங்களால் கோமளம் சந்திராவைக் காயவில்லை.

நெடுநேரம் இருவரும் கண்ணீர் வடித்து இருந்துவிட்டு ஒருவரையொருவர் தேற்ற, மன அமைதியும், கடைசியாக வெனினும் பக்கத்து வீட்டார் இருவர்—ஒரு பொது மனிதனின் ஆஸ்தியை சமமாக அனுபவித்த இருவர்—ஒன்று சேரும் காலம் வந்ததே என்ற ஆறுதலும் கொண்டார்கள். அத்தகைய ஆறுதல் பிறந்துவிட்டால் நேயர்காள்! அது ஓர் தனியின்பமாகுமன்றோ?

பின் சந்திரா "அக்காள்! வருத்தமில்லாமல் கூறு. எப்படி இக்கதிக்கு ஆளானாய்?" என்றாள்.

கோமளம் அக்காள் உடன் பதில் சொல்லவில்லை. எப்படித்தான் சொல்ல ஏலும்? மானாவமான மென்பது அல்வழி புகுந்தார்க்கில்லை யென்பதில்லை யன்றோ!

பிறகு அவள் சொன்ன கதையிலிருந்து ரங்கநாதமே அவளைக் கூட்டிக் கொண்டு போனானென்றும், இருவரும் பல வூர்களைச் சுற்றி யலைந்தார்களென்றும், நாட் போகப்போக—கோமளவின்பத்தை அவன் துய்க்கத் துய்க்க—அஃதுடன் அவள் கைப்பணமெல்லாம் குறையக் குறைய,-நகைகள், வெள்ளிப் பாத்திரங்களெல்லாம் தொகையில் சிறுகச் சிறுக—அவனது காதல் வேட்கையும் படிப்படியாய்க் குறுகத் தொடங்கியதென்றும், கடைசியில் ஜோலார்பேட்டையை யடுத்த ஒரு கிராமத்தில் ஒரு காலி வீட்டுத் திண்ணையில் இருவரும் இரவு தூங்கத் தொடங்கவே ரங்கநாதம் மெல்ல எழுந்து ஓடிவிட்டானென்றும், அது முதல் அவள் கதியற்றுப் பிச்சைக்காரிபோல் சீரழிந்து இருந்து வருகின்றாளென்றும் தெரிந்தது. ரங்கநாதம் சொந்த வூரான வேலூரில் சுகமாயிருக்கிறானாம். ஏதோ சொத்துப் பத்துகளு மிருக்கின்றனவாம். கோமளம் தம் பிச்சைக்கார உருவத்திலேயே தத்தித் தள்ளாடி வேலூர் சென்று ரங்கநாதத்தைக் கண்டு தம் மதிகெட்ட தன்மையைக்கூறி மன்றாடினாளாம். அதற்கு கிடைத்த பதில் கண் சிவப்பு, திட்டு, அடிகள் தோற்றம், 'பயித்தியமா?' 'நீயார்' என்ற கேள்வி முதலியவைகள்தானாம்.

அதன் பின் ஊரூராயலைகையிலேயே கோமளம் சத்திரத்தில் இறக்கப் பார்த்தாள்; சந்திராவினால் காப்பாற்றப்பட்டது.

சந்திரா இந்தக் கதையைக் கேட்டால் என்னவாள்? தன் கணவன் போலிருந்தவரின் உண்மை மனைவி இப்படியா போகவேண்டுமென்று நினைத்து, தகா ஒழுக்கத்தினால் வரும் தீங்கை இன்னும் சற்று விளக்கமாகத் தெரிந்து கொண்டாள்.

அதன் மேல் நிரம்ப நிரம்பப் பிரயாசைப்பட்டு கோமளம் "தங்காய்! அவர்கள் எங்கே?" என்றாள். நண்பர்காள்! அவர்கள் என்றால் யார் என்று தெரியுமல்லவா உங்கட்கு?—பாவம்! சற்று புத்தியைக் கடன் கொடுத்த ஏதுவால் கோமளத்திற்கு 'என் கணவர்' அல்லது 'என் துணைவர்' என்று தைரியமாகச் சொல்ல முடியவில்லை! பழி முழுவதையும் புருஷன் மேல் போட்டு சமூகம் புகழுமாறு நடந்துகொள்ளத் தெரியாது, கோமளம் தானும் பழிக்கு ஆளாகிக் கொண்டு இன்று தத்தளிக்கிறாள்!





கோமளம் கேள்வியைப் போட்டதும், சந்திராவென்னும் கருணைக் கடல் நிகழ்ந்தவற்றை யெல்லாம் கூறி, திருக்குற்றாலத்தில் மரண மடைந்ததைத் தெரிவித்தாள். தெரிவித்தால் ஐயோ! பாவம்!—இரங்காமல் என் செய்வது? கோமளம்தான் தூர்த்த நடக்கு முழுக் காரண மென்பதற்கில்லை யன்றோ? அவள் அழுத அழுகையை சொல்லமுடியாது? அவள் உடம்பு தசையாக மட்டிலு மில்லாமலிருந்தால் வடிந்த கண்ணீரினால் கரைந்து அணுவாகவும் பரமாணுவாகவும் போயிருப்பாள்! தன்னால் அவர் உடல் நலம் குன்றி, தேய்ந்து, மனமுடைந்து பச்சாதாபப்பட்டு தன் பெயரையே சொல்லி இறந்தாரென்றதும், அவள் சத்திரத்திலேயே இறந்து போகாதிருந்து விட்டோமே என்று எண்ணினாள். சாதிராவை அதன் மேல் ஏறெடுத்ததும் பார்க்க முடியாது வெட்கித்தாள். அவள் மனதில் புருஷனை ஏமாறவைத்துக் கொன்றதாகிய பெரும்பழி ஒரு மாமலை போல் தோன்றி அழுத்தலாயிற்று. பாவம்! என்ன செய்யலாம். தீர யோசித்து நடவாமல் போனால் இத்தகைய மாபெரும் சங்கடங்கள் தோன்றித் துளைத்துத் தொல்லைப்படுத்தி அரித்துச் சித்திரவதை செய்வது சகஜந்தான்!

—காரியம் ஆனபின்பு என்ன சங்கடப்பட்டு என்ன? சிலநாள் சகோதரிகள் இருவரும் திருவண்ணாமலையை விட்டுப் புறப்பட்டு பல பல விடங்கட்குப் போனார்கள். இறுதியில் கோமளமும் தன் வாணாளை தேச கைங்கர்யத்தில் செலவழிக்கப் பிரியப்படுவதாக அபிப்பிராயம் தெரிவித்ததின்மேல் — சந்திராவின் நெடுநாளைய ஆசையின்படி—நேராக சேத்தூருக்கு வந்தார்கள். அதன் பின்புதான் ஆஸ்ரமமும் பிறவும் அமைந்தன. இப்போது கோமளம் ஆஸ்ரமத்திலேயே இருக்கின்றாள். இருவரும் உற்ற தோழிகள் போலவும், ஒருவருக்கொருவர் தாய் போலவும் நடந்து கொள்கிறார்கள். வயதும் உலக ஞானமும் அதிகரித்து விட்டதால் இருவரும் இன்று, முன்பு தண்டையார்பேட்டையிலிருந்தது போலில்லை. சந்திரா அப்பொழுதும்கூட மிக மோசமான நிலைமையி லிருக்கவில்லையன்றோ? நான் முன்னொரு இடத்தில் கூறியதுபோல், அவள் காம விகாரஉணர்ச்சி முளைத்துக் கூத்தாடும் ஒருகாலத்தில் பார்வதியென்னும் படுமோசக்காரியை அடைந்துவிட்டதால்தான் ஏதோ கொஞ்சம் ஒழுக்கங் கெட்டவள்போல் இருந்தாளே யல்லாது வேறு விதமான தப்பித மெதுவும் செய்து விடவில்லை. அதுவும் சின்னாளையில் உலகைத் தெரிந்து கொண்டவுடன் ஓடி மறையலாயிற்று.

அதுபோலவே சீர்திருந்தி யிருக்கிறாள் கோமளமும்.

நானும் சந்திராவும் இவ்வளவு நீண்ட பெருங்கதையைப் பேசிக் கொண்டதும், எத்தகைய அன்பு ஊறிக் கசியப் பெற்றிருப்போம் என்று நினைக்கிறீர்கள்? சந்திரா கதையைச் சொல்லும்போதே சில இடங்களில் இரங்கினாள்; சில விடங்களில் உருகினாள்; சில விடங்களில் கண்ணீர் வடித்தான்; சில விடங்களில் தேம்பினாள். நானும் அதுபோல் எத்தனையோ உணர்ச்சிகட்கு ஆளானேன்.

இறுதியில் ஒன்று. இல்லை அதற்கு முன் உண்மையைத் துறந்து கூறிவிடுகிறேன். எனக்கு என்—என்—என் சந்திராவைக் காணவும் மனதிற்குள் கெட்ட எண்ணமென்று இந்நாள் நான் கொள்ளத் தகுந்த ஒரு எண்ணம் உதயமாயிற்று. அவளுக்கும் அந்த ஆசை வந்திருக்கலாம் போலிருக்கிறது. பேச்சினிடையிலேயே ஆங்காங்கு அவ் உணர்ச்சி சுடர்விடலாயிற்று. ஆனால் நான் செவியைக் கதைக்காக விட்டுக் கொண்டிருந்தாலும், மனதிற்குச் சீரிய உபதேசத்தைக் கொடுத்து சந்திராவை சகோதரியைப்போல் நடத்திக்கொள்ள உத்தரவிட்டேன். மிகவும் கஷ்டப்பட்டு இசைந்தது மனம். பின் துணிந்து சந்திராவின் கையைப் பிடித்துக்கொண்டு "சந்திரா இனி என்னை ஒரு சகோதரனைப் போல பாவித்துக் கொள்!" என்றேன். அவள் முகம் திடீரென விளறியது; நாணம் தலையைப் பிடித்துத் தாழ்த்தியது; உடம்பெல்லாம் குழைந்தது.

நான்:—சந்திரா; நீ ரஞ்சினியாகி பெரிய வனிதாஸ்ரமத்தின், சொந்தக்காரியாக விருக்கிறாய்! உன்னை இவ்வூரும் தமிழ் நாடும் பாராட்டுகின்றன. அந்த நிலையில் நீ ரஞ்சினியாகவே இருக்கவேண்டுமென்பது என் அபீஷ்டம்.

என்றேன். அவள் நாணத்துடனேயே ஆழ்ந்து சிந்தித்தாள். நான் கையை விடாமலே, "சந்திரா! நம்சகோதர பாவம் மாறாதிருக்க வேண்டுமென்பதே என் வேண்டுகோள். நீ உன் அளப்பரிய பற்றினால், அன்பினால், வாஞ்சையினால் என்னையும் எந்த கற்புக் கரசியையும் ஜயித்துப் புறம் போக்கி விட்டாய்! நீ காண்பித்த அன்பை என்ன பாஷையில் புகழ்வதென்று அறியாது தவிக்கின்றேன். உன் கதை

யைக் கூறினுல் உலகமே நம்பத் தயங்கி விடும் போலிருக்கிறது. என்ன அற்புதம்! நீ என்பால்கொண்ட அன்பு அளப்பரிது! அளப்பரிது. சந்திரா! நான் உனக்கு என்ன கைமாறு செய்யப் போகிறேன்! உலகிற்கு உன் சரிதையை எடுத்துக்கூறி மெச்சிப் புகழ்வது உன் அன்பின் ஒரு அணுவைப் பாராட்டுவதாகவே தானிருக்கும்." என்று சொல்லி கைகளில் முத்தமிட்டேன். முத்தமிடப்பட்டதும் அவள் மனம் குளிர்ந்தது.

உடன் அவள்:—குழந்தை சந்திராவை என்னிடம் அனுப்புங்கள்........ ....அக்காள் கல்யாணியை நான் கண்டு களிக்க வேண்டாமா?

நான்:—சந்திரா! அதற்கென்ன ஆட்சேபனை? எத்தனை வருடம் ஆனாலும், உலகமெப்படி புரண்டாலும் நீயும்



நானும் இரண்டல்லவே. கல்யாணி நம்மிருவர் சரிதையையும் அறிவாள். அவள் நீ இங்கிருப்பதாகக் கண்டால், உன் அன்புப் பெருக்கை அறிந்தால், உன்னை சிரமேற் ஏற்றிப் புகழ்வாள்! குழந்தை சந்திராவேயன்றி நானும், கல்யாணியும் மற்றக் குழந்தைகளும், எல்லாமும் உனக்கே சொந்தம். உன் அன்புப் பேரொளியில் எதுதான் வசப்படாது?

இவ்வாறு கூறிவிட்டு ஸ்ரீமதி கோமளத்தைப் பார்க்க விரும்பினேன். ரஞ்சினி சிறிது நேரத்தில் அவளை அழைத்து வந்தாள். வந்ததும் நான் நோக்கினேன். ஆ! என்ன தூய்மை! தண்டையார்பேட்டையில் ஸ்ரீமதி கோபால்சாமியாக இருந்ததைவிட பரிசுத்தமாக இருக்கின்றார். அவருக்கு சந்திரா என்னை அறிமுகப்படுத்தினாள். உடன் ஆநந்தபாஷ்பம் வடிய, "தம்பி நீயா! சிறுபிள்ளையாக இருக்கும்போது பக்கத்து சிங்காரம் செட்டியார் வீட்டில் இருந்தாயே! தம்பி" என்று வாஞ்சையானது வார்த்தை யுருவத்தில் வெளியாகும்படி கூறினார். உடன் நானும் உள்ளங் கவர்ந்தெழுந்தோங்கும் பேரானந்தப் பெரும் பூரிப்போடு "அக்காள்" என்று நமஸ்கரித்தேன். அவரும் நமஸ்கரித்தார்.

நேயர்காள்! இந்தக் கதையைப் படிக்கத்தான் உங்கட்கு உரிமையுண்டு. இதர உரிமைகளெல்லாம் என்னுடையதென்று தெரிவித்துக் கொள்கிறேன். பர்மாவிலும், மலாயாவிலும், இந்தோசீனா, சுமத்திரா, ஜாவா, இலங்கை, தமிழ்நாடு முதலியவற்றிலு மிருக்கும் என் தமிழ்ச் சகோதரர்கட்கு என் மனமார்ந்த வணக்கம்.

இத்தனை நாளும் பொறுமையுடன் காத்திருந்து கதையைப் படித்த உங்கள் பொறுமைக்காக மற்றொருமுறை வணக்கம். வந்தேமாதரம்!

## மற்றொரு தொடர் கதை

அடுத்த வாரம் முதல் ஊழியன் இதழ்களில் இ. சி. எழுதிய மற்றொரு தொடர் கதையை எதிர் பாருங்கள். கதாநாயகி ஓர் கிருஸ்தவப் பெண்மணி. இதில் கிருஸ்தவர்கள் விசேஷ சுவை காணலாம். இந்துக்கள் கதை ரசத்தோடு கிருஸ்தவ வழக்க ஒழுக்கங்களைத் தெரிந்து கொள்ள முடியும். முஸ்லிம்களும் இதர்களும் படிப்பதும் தகுதியற்றதல்ல.

## ஒரு குறுக்கு வழி

இப்போது சிவகங்கையிலிருந்து காரைக்குடிக்கு வரவேண்டுமென்றால் திருப்பத்தூர் சுற்றி வரவேண்டியிருக்கிறது. இதற்கு சுமார் 35 மைல் பிரயாணம் செய்யவேண்டும். இந்தக் கஷ்டத்தை நடராஜபுரம் கல்லல் ரோடொன்று போடுவதன் மூலம் குறைத்துக் கொள்ளலாம். சிவகங்கைக்கும் நடராஜபுரத்திற்கும் ஏற்கெனவே ரோடிருக்கிறது. கல்லலுக்கும் காரைக்குடிக்கும் ரோடு ஏற்பட்டிருக்கிறது. அந்த நிலைமையில் செய்ய வேண்டுவது கல்லலுக்கும் நடராஜபுரத்திற்கும் 5 மைல் தூரம் ரோடு போடவேண்டுவதே. இந்தக் குறுக்கு வழி யமைந்துவிட்டால் 12 மைல் பிரயாணக் கஷ்டம் குறையும். இந்த வேண்டுகோளை சர்க்காரும் ஜில்லா போர்டாரும் கவனிக்க வேண்டுமென்று திரு. எ. எல். வைரவன் அவர்கள் எழுதுகிறார்.



பொருளாதார சாஸ்திரக் குறிப்புகள்

# நாட்டின் கடன் சுமை

## முன்னிருந்த நிலைமையென்ன இப்போதிருக்கும் கோலமென்ன?

வறுமைக்குப் பெயரெடுத்திருக்கும் இந்தியர் (ஒருவரிருவர் நீங்க) அனைவரும் கடனாளிகளாகவே இருக்கின்றனர். வேளாண்மைத் தொழில் பூண்டிருப்பார் கடன் நிலை பழமொழியாகக் கூடவும் சொல்லப்படுவதுண்டு, "உழவன் கணக்குப் பார்த்தால் உழவுக் கம்பு மிச்சம்" என்பது திருநெல்வேலி ஜில்லாவில் வழங்கப்படும் ஒரு பழமொழி. இதுபோல் ஆங்காங்கே வழங்கி வரும் பழமொழிகள் நிரம்ப உள. ஒரு உழவன் (வேளாளன்) உழவுத் தொழிலிலேயே நீண்ட நாள் ஈடுபட்டிருந்து சில வருடங்களில் கடனாளியாகி, திண்டாடி, கடன்காரர்கள் தொல்லையால் பெண்டு பிள்ளைகள், உற்றார் உறவினர், பெற்றார் பெரியோர், வீடு வாசல், சொத்துபத்து, பாத்திர பண்டம் எல்லாவற்றையும் துறந்து காட்டுக்கு ஓடிப் போனானாம். அங்கு ஒரு குகை தென்பட்டது. அதற்குள் போகவும் நிர்வாணமாக (ஒரு கோவணம் மட்டிலும் கட்டிய) ஜயின விக்ரகமொன்று தெரிந்தது. உடன் உழவன் ஓடிப்போய் "அண்ணா" வென்று கட்டிப் பிடித்து, "நீ எத்தனை ஏர் வைத்து உழுதாய்?" என்று அழுதானாம். வெகு நேரம் அழுத பிறகு தான் தான் கட்டிப் பிடித்தது ஜயின விக்ரகமென்று தெரிந்ததாம். இந்தக் கதை தமிழ்நாடு முழுதும் கூறப்படுவதுண்டு. இதிலிருந்து உழவர்கள் எவ்வளவு நிர்க்கதியான நிலைமையிலிருக்கின்றார்கள் என்று கண்டு கொள்ளலாம்.

### கிராம அமைப்புகள்

இப்படிப்பட்ட கடன்கார நிலைமை பண்டை நாளில் இருந்ததாவென்றால்—இருந்ததாகத் தெரியவில்லை. பஞ்சாயத்து, நாட்டாண்மை முதலிய கிராம அமைப்புகளின் பரப்பினால் கடன் மிகுதியாகப் பெருகாமலும், சொத்து அயலார் வசப்படாமலும் குடி வாழ்க்கை நடைபெற்றது. அந்நாட்களில் நாம் இன்று நம் நாட்டில் காண்பதுபோல தனி நில உரிமை இருந்ததில்லை. கிராம ஜனங்களின் பொது அநுமதியில்லாது வெளியார்கட்கு அங்கு சொத்து வாங்க முடியாது. கடன் கொடுத்தோர் மொத்தம் பெறும் வட்டித்தொகை முதலின் அளவுக்கு அதிகமாயிருத்தலாகாது என்று வரையறுக்கும் தண்டுப்பட்டு என்ற சட்டம் ஏற்பட்டிருந்தது. அந்த சட்டம் இன்றும் இந்தியாவில் பல பகுதிகளில் காணப்படுகிறது. இந்த ஏற்பாடுகள் கடன் படும் மக்கட்குப் பெரிய அரண்களாயிருந்தன.




ஸ்ரீரங்கம் சுகாதார வார-சிசுவாரக் கொண்டாட்டங்கள் 7-12-35-ந் தேதி நடைபெற்றன. திவான்பகதூர் சர் T. தேசிகாச்சாரியார் திறந்து வைத்தார். —Pon.

### அரசியல் மாற்றம்

இந்த நிலைமை பரவியிருக்கும்போது கடந்த சில நூற்றாண்டுகளாகப் பெரிய அரசியல் மாற்றமேற்பட்டது. அது சமூகத்துறை பொருளாதாரத்துறை முதலியவற்றில் பெரும் மாற்றத்தை உண்டுபண்ணிற்று. அதன் மூலம் கிராமக்கழகங்கள் மயங்கொழிந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆட்சி முறையடைந்த சில திருத்தங்கள் நாட்டில் கடன் வளர்வதற்குத் துணைபுரிந்தன. அஃதோடு நிலத்தில் மக்கட்கு தனியுரிமையும் வழங்கப்பட்டது. எனவே சொத்துகளின் விலையுயர்ந்தது. அதனால் நிலச்சுவான்களின் நிலைமை ஓங்கத் தொடங்கிற்று. பிற்காலத் துண்டான ஜமீன் குடிச்சட்டங்களால் குடிவாரத்தார் நில ஓரளவு உறுதி பெற்றதோடு அன்னார்க்கும் நிலத்தில் ஒரு உரிமை கிடைத்தது. இந்த முறைகளால் நீண்டுவாராற்றுக் கிடந்த இடங்கள் தகுந்த உடமைகளாகவும் கடன் வாங்குவதற் கேற்ற கருவிகளாகவு மாயின. அன்றி நாட்டில் நாலாபக்கங்களிலும் சிவில் கோர்ட்டுகள் நிறுவப் பெறவும், புதிய வழக்கு முறைகள் ஏற்படவும் செய்த போது கடன் கொடுப்போர்க்கும் பெரிய துணை ஏற்பட்டது. ஆதலால் ஒரு காலத்தில் வழக்குக் கிடமில்லாமல் இருந்த கொடுக்கல் வாங்கல் [illegible] குட்பட்டு கோர்ட் [illegible] அப்போது ஏற்பட்டன கடன் [illegible] வானைக் கொலை செய்வதற் குதவுவது போன்ற சில சட்டங்கள். இந்தியன் காண்ட்ராக்டு ஆக்டு என்ற ஒப்பந்தச் சட்டம், சிவில் நடவடிக்கைச் சட்டம் முதலியன [illegible] கள், விவசாயக் கருவிகள் முதலிய வற்றை ஜப்தி (Attach) செய்வதற்

கும் கடனாளி யைச் சிறைப்படுத்துதற்கும் உறு துணையாயின. எனவே இத்தகைய சட்டங்களை நாட்டின் பொருளாதார வளர்ச்சியையும் மக்களின் ஒழுக்கத்தையும் வெட்டி வீழ்த்திய கோடரிகள் என்று கூறலாம்.

### கடன் குறையுமா?

அவற்றோடு ரிஜிஸ்திரேஷன் ஆக்டு என்ற பதிவுச் சட்டம், "டிரான்ஸ்பர் அப் பிராப்பர்ட்டி ஆக்ட்" என்ற சொத்து மாற்றச் சட்டம் முதலிய சட்டங்கள் எழுந்தமையால் சொத்துகள் மலிந்தன. மலியவே அடைமானங்களின் தொகைகள் பெருகலாயின.

கடன் வாங்கும் சௌகரியமிருப்பது சற்று ஆறுதலாக விருக்கலாம். ஆனால் பெரிய வீழ்ச்சியாகவு மிருக்கின்றது. ஜீட் என்ற பிரஞ்சுப் பொருளாதார சாஸ்திரி யொருவர் இவ்வாறு கூறினர்:—

"கடன் வாங்கு மாற்றல் சொத்துடையா னொருவனுக்கு சமயத்திற்குத் துணை நிற்பதானாலும் நாளடைவில் அவனுக்கு விலங்காகவே மாறி விடுகிறது."

கடன் வாங்குவது, அளவறிந்து செலவிட்டு அளவறிந்து மீதம் வைத்து அளவறிந்து வாழ்பவருக்கே சிறிது குணம் செய்யக்கூடும். ஆனால் அத்தகைய "அளவு மக்களை" யாண்டும் காண முடியாது. விசேஷமாகவும் நம் நாட்டு மக்கள் கணக்கறிந்து செலவிடுவதில்லை. சமூகச் சட்டங்களால் எத்தனையோ செலவுகள் நமக்கு ஏற்படுகின்றன. அவற்றிற்கெல்லாம் சொத்து பத்துகளை அடைமானம் வைத்து பணம் வாங்குகிறோம்; பிற்பால் தீர்க்க வழியில்லாதபோது சொத்து பிறர் கைக்குப் போகிறது. அதிலும் இக்கட்டுரைத் தொடக்கத்தில் கூறியவாறு விவசாயிகள் நிலைமை கடன் என்னும் அரக்கன் ஏறி செல்லும் ஒரு ஏணிப் படியா யிருக்கின்றது.

முற்காலத்தில் கடன் வாங்கும்போது சொத்தை ஈடுவைக்கும் பழக்கமே (இந்தியாவில்) இருந்ததில்லை.

### தற்காலக் கோர்ட்டுகள்

கோர்ட்டுத் தீர்ப்பு மூலம் கடனாளியின் சொத்து விற்பனை செய்யப்படும் கொடுமையும் பண்டை நாளில் இருந்ததில்லை. அந்த நாளையில் நாட்டாண்மைக் கழகங்களும் பஞ்சாயத்துக்களுமே கடனை யொட்டிய வழக்குகளை முடிவு செய்து வந்தன. ஆனால் பிற்காலத்தில் கடனாளிகள் விஷயத்தை கோர்ட்டுகள் விசாரிக்கத் தொடங்கி விட்டன. தொடங்கவும் கடனுக்காகச் சொத்து விற்கும் முறை பெருகிற்று. விவசாயிகள் ஆஸ்தி கைமாறத் தொடங்கிற்று. இந்த அழிவிற்கு முழுக் காரணம் அந்நிய நாட்டு சிவில் சட்டம் அவற்றிற்கு ஒவ்வாத இந்நாட்டில் புகுத்தப்பட்டதே யாகும்.

கோர்ட்டுகள் உண்டாவதற்கு முன்னம் 'சவுக்கார்'களின் கொடுக்கல் வாங்கல் முறை இந்நாட்டில் சில காலம் வழக்கத்திலிருந்திருக்கிறது. அதுவும் மிகுந்த தொல்லையையே கொடுத்ததென்பதில் சந்தேகமில்லை. கடனாளிகளிடம் சென்று "தாரணை" நிற்கும் வழக்கம் வடநாட்டில் பழக்கத்திலிருந்து வந்தது. பணம் செல்லாகும் வரையிலும் கடன் கொடுத்தவன் உண்ணாவிரதம் இருப்பதும், கடனாளி வீட்டில் அடுப்பு மூட்டாது தடுப்பதும், கடனாளியை வெளியே போகவிடாது மறியல் செய்வதும் அக்காலத்தில் கையாடப்பட்ட சில முறைகளாகும். இவ்வழக்கம் இன்னும் சில விடங்களில் காணப்படுகின்றன. இவ்வாறு தாரணை நிற்பதற்காக பிராமணர்களையே சௌக்கார்கள் அமைத்திருந்தனர். பிராமணரை பட்டினி யிருக்க விடுவது பாவச் செயல் என்று கருதப்பட்டதே மேற்படி சௌகார்களின் ஏற்பாட்டிற்குக் காரணம். காந்திஜி சத்தியாக்கிரகம் கிட்டத்தட்ட தாரணை முறையையே ஒத்திருக்கிறது.

### கடன் ஏறுதல்

"விளை பொருட்களின் விலை ஏறுந்தோறும் கடன் சுமையும் ஏறும்" என்றார் டார்லிங் என்னும் நூலாசிரியர். இவ்வுண்மை நிரம்ப நிஜமென்பதைக் கடந்த சில ஆண்டுகளில் நன்கு கண்டு கொண்டோம். விளை பொருட்களின் விலையும் நிலங்களின் விலையும் ஏறிக்கொண்டே வந்த சென்ற சுமார் 50 ஆண்டுகளில் கடன் சுமையும் முறையே வளர்ந்துகொண்டு வந்திருக்கிறது. இதனைச் சில உதாரணங்களால் விளக்கலாம். 1900-ம் வருடத்தில் பஞ்சாப் மாகாணத்தில் ஏக்கரொன்றுக்குரிய அடைமானத் தொகை 19 ரூபாயாக விருந்தது. அது 1924-ல் 85 ரூபாயாக ஏறிவிட்டது. அம்மாகாண ஏற்றுமதிப் பண்டங்கள் 105 சத விகிதமே வளர்ச்சி பெற்றிருந்தது; ஆயினும் அடைமானத் தொகை 347 சத விகிதம் உயர்ந்துவிட்டது. சென்னை மாகாணத்தின் 1891-ல் சொத்து அடைமானத்தில் பேரில் வாங்கப் பெற்றிருந்த கடன் தொகை $6\frac{1}{2}$ கோடியாக இருந்தது. 1900-ல் $7\frac{3}{4}$ கோடியாகவும் 1914-ல் 20 கோடியாகவும் பெருகிவிட்டது.

பின்னர் 1929-க்குப் பிறகு பண்டங்களின் விலை மிகக் குறைந்ததோடு அடைமானங்களின் எண்ணிக்கையும் சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கிற்று. 1926-க்கும் 1932-க்கும் இடையில் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியான பண்டங்களின் விலை முன் ஏற்றுமதியானதைவிட 47 சத விகிதம் குறைவுற்றிருக்கையில் கடன் தொகை 16 சத விகிதமே குறைந்திருக்கிறது. இது தகுதியான குறை வன்றாயினும் விலை குறையும்போது கடன் பளு குறைவதை விளக்கமாக இதன் மூலம் கண்டு கொள்ளலாம்.

---





# அடுத்த வீட்டுக் கமலம்

(எஸ். ஸி.)

இரவு மணி 9-30. நாம் ஒரு வீட்டின் படுக்கையறையைப் பார்க்கிறோம். அந்த அறை மிக விஸ்தாரமானதல்ல; எனினும் 'நாசுக்காக' அமைந்திருக்கிறது. அதன் ஒரு சுவரோரம் ஒரு திருவிளக்குப் பிரகாசிக்க, அப்பிரகாசத்தைப் பன்மடங்கு பெருக்கிக்கொண்டிருந்தது ஒரு பெரிய நிலைக்கண்ணாடி. அவ் வெளிச்சத்தில் அறையிலுள்ள பொருட்களெல்லாம் நன்றாக விளங்கின. சுவர்களில் காமச்சுவை யூட்டும் பல படங்கள் இருந்தன. சில உயர்ந்த ரகப் பட்டாடைகள், மேலான ஜாக்கட்டுகள், ஒன்றிரண்டு நாகரிக நகைப் பெட்டிகள், மேனாட்டுக் கட்டில் ஒன்று, பல செண்டுப் போத்தல்கள், ஒரு வெற்றிலைத் தாம்பாளம் முதலியன ஆங்காங்கு உரிய இடங்களில் காணப்பட்டன. அவற்றிற் கெல்லாம் பரிமளமளித்தாற்போல் ஊதுவர்த்தி ஒருபால் புகைவிட்டுக் கொண்டிருந்தது.

இப்படிப்பட்ட படுக்கையறையில் ஒரு பெண் தன்னந் தனியளாக உட்கார்ந்து கண்ணாடியில் தன் வடிவத்தைப் பார்த்த வண்ணமே சிங்காரித்துக் கொண்டிருக்கிறாள். பல புடவைகளையும் ரவிக்கைகளையும் எடுத்துத் தன் இடையிலும் கையிலும் சேர்த்து எது பொருத்தமானதென்று இடையிடையே ஆராய்கின்றாள். அப்பால் நகைப் பெட்டியைத் திறந்து எந்த நகையை அணிந்தால் அழகு பெருகுமென்று யோசிக்கின்றாள். பிறகு கொஞ்சம் செண்டை எடுத்துப் பூசிக்கொள்கின்றாள். செண்டுப் போத்தலைத் திறந்ததும் அறை முழுதும் "கமகம" வென்று பரிமளிக்கின்றது. அவள் ஏற்கெனவே ஸ்நாகம் செய்து விட்டாள் போலிருக்கிறது. உடம்புக்கு ஓர் தனியழகைக் காண்கிறோம்.

அவளுக்கு வயது 25 அல்லது 26 இருக்கலாம். கண்ணுக்கினிக்கும் கவின்தரும் தோற்றமும், செல்வக் குடும்பத்தில் சேர்ந்தசெம் பெருமையும் அவளிடம் காணப்படுகின்றன. செல்வக் குடும்பத்தில் பிறந்திருந்ததோடு செல்வத்திலேயே வளர்ந்து செல்வத்திலேயே தவழ்பவள் போலிருக்கிறது; செழிப்பு அவள் உடம்பில் எங்கும் குடியிருக்கக் காண்கிறோம். முகத் தோற்றத்தையும், உடற் கட்டையும், தனித் தனியே ஒவ்வொரு அங்கங்களையும் பார்த்தால் பல பக்கங்களை வர்ணிப்பாக, எழுதி நிரப்பலாம்போல் தோன்றுகிறது. சற்றுக் காமவுணர்ச்சி மிகுந்த மனம் படைத்தவர்களா யிருந்தால் அவளுக்குக் கோவில்கட்டிப் பூஜிக்கக் கூடவும் துணிந்து விடுவார்கள். இப்போது பரபரப்புடன் அவள் சிங்காரிக்கும் வேலையிலீடுபட்டிருக்கிறதிலும் அப்பரபரப்புக்கூட முகத்திற்கு ஓர் தனியான வசீகரத்தைக் கொடுக்கின்றது. இந்தக் கட்டத்தில் ஒன்று தற்போதிருக்கின்ற நிலைமையிலேயே பார்ப்போர் ஸ்தம்பித்துக் கல்லாய்ப் போகத் தகுந்த வடிவு பெற்றிருக்கின்றாளே, அப்படிப்பட்டவள் இன்னும் தன்னை அதிகமாகச் சிங்காரித்துக் கொண்டு விட்டாளானால்—அம்மம்மா! அப்போது அவளை என்னவென்று சொல்வது?

* * *

இந்தப் பெண்கள் நாயகம் தன் வேலையில் தீவிரமா யீடுபட்டிருக்க, அதனை ஒரு வாலிபன் எவருக்கும் தெரியாது, பக்கத்து அறையில் நல்ல இருட்டில் நின்று கொண்டு, ஒரு ஜன்னற் கதவின் இடைவழியாகக் கூர்ந்து பார்த்துக்கொண்டிருக்கிறான். அவன் பார்க்கப்பார்க்க அவன் முகத்தில் ஆச்சரியமும் கோபமும் பெருகுகின்றன.

அவனுக்கு வயது சுமார் முப்பது அல்லது முப்பத்து ஒன்றுக்கு மேலிராது. பெரிய சீமான் போலிருக்கிறது; தோற்றத்தில் ஒரு செழிப்பு, அழகில் ஒரு கொழிப்பு, பார்வையில் ஒரு விழிப்பு எல்லாமிருந்தன. அவனது அங்க லக்ஷணங்களைக் கண்டால் எந்தப் பெண்ணும் காமுறுவாள்.

அப்படிப்பட்ட அந்த வாலிபன் மேற்படி பெண்மணி முடிவாகத் தன்னை சிங்காரித்துக் கொள்வதற்கான சாமான்களை எடுத்து ஒதுக்கி வைத்து விட்டு, அழகுக்கழகு செய்வதேபோல்—இல்லை உண்மையான அழகை மறைக்கவே செய்கின்றாள்; சந்தேகமில்லை—முகப் பொடியைத் தன் அழகு வடியும் வதனத்தில் 'ஒத்த'த் தொடங்கியதும் அவன் திடீரென ஒரு வாயில் வழியாக ஓடிவந்து அவள் முன் நின்றான். நின்றதும்:—"சத்தே! என்ன இது? என்ன மூக்கு? என்ன செய்யப் போகிறாய்!"

எதிர்பாராத விதமாக இக் கேள்வி களைக் கேட்ட வாலிபன் தன் முன்

தோன்றி விட்டதைக் கான ஆச்சரியம் கொண்டாளானலும், அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. நொடிப்பொழுதில் தன் முகபாவனையை மாற்றிக்கொண்டு அவ்வாலிபனைக்கவனியாதவள் போல் உட்கார்ந்து தன் பணியில் மீண்டு மீடுபட்டாள். அதனைப் பார்த்தான் வாலிபன். கோபம் கரை கடந்து வழியத் தொடங்கிற்று. உடன் "என்ன ரத்னு! நான் கேட்பதைச் சற்றும் பொருட்படுத்தாது 'உன் பாட்டுக்கு' என்னமோ செய்கிறயே? படுக்கை புகவேண்டிய நீ 9–30 மணிக்கு முகப்பொடி, ரவிக்கை, சென்டு, புடவை முதலியவற்றைத் துணை நோதுகின்றயே; எதற்கு?" என்று மீண்டும் கேட்டான்.

இக்கேள்வியில் முந்திய கேள்வியைப் போன்ற வற்புறுத்தலில்லை. ரத்னு அதனையும் கவனித்தாளில்லை.

உடன் அவன் சாந்தமடைந்து பக்கத்தில் சென்று அவள் புஜத்தில் கையை வைத்துக்கொண்டு:—என்ன ரத்னு! சும்மா விருக்கிறயே?

அவன் தொட்டதும் அவள் சட்டென்று மாறிநின்று:-என்னைத் தொடாதீர்கள்; ஏதேனும் பேசவேண்டியிருந்தால் விலகி நின்று பேசுங்கள்.

அவன்:—ஏதுக்கு இந்த வேஷம்!

ரத்னு:—நான் ஒருவரைப் பார்க்கப் போகிறேன்.

அவன் முகம்நாணம் கொண்டு விட்டது. அப்பால்:-(முகம் நாணமடைய) இரவு 10 மணிக்கா ஒருவரைப் பார்க்கப்போகிறய்? அப்படிப் பட்டவர் யார்?

ரத்னு:—எனக்கு வேண்டிய ஒரு மனிதர்.

அவன்:—அதற்குச் சிங்காரங்கள் எதற்கு!

ரத்னு:—இல்லையானல் என்னோடு நெருங்கிப் பழகமாட்டார்.

அவ் ஆடவனின் முகம் கன்றியது. சற்று நேரம் மௌனமாக விருந்தான்.

உடன்:—ரத்னு! இது தகுதியா உனக்கு? உன் அந்தஸ்தெங்கே? குலமெங்கே? செல்வாக் கெங்கே! நீ இப்படி நடக்கத் தொடங்கினல்! சென்ற சில மாதங்களாக.............

ரத்னு:—என்ன? நீங்களா என்னிடத்தில் கேட்கின்றீர்கள்? நான் போகக்கூடாதென்று நீங்களா சொல்வது? என் குலப்பெருமையை நீங்களா எடுத்துக் காண்பிக்கவேண்டும்?

அவன்:-கோபங்கொள்ளாதே ரத்னு. நான் நல்ல பாடம் படித்து





விட்டேன். சில நாட்களாக நீ அந்தக் கங்காதரன் என்ற இளைஞனுடன் நடந்து கொள்ளும் முறை நன்றாயில்லை. அன்றொருநாள் கேட்டேன்; நீ யொன்றும் பதில் சொல்லவில்லை. இன்னொரு நாள் இருவரும் நடந்து கொண்டதைப் பார்த்து உன்னைக் கத்தியால் குத்தி விடுவதென்றே நினைத்தேன். அதன் பின்னரும் நீ அவனோடு உறவாடுவதை நிறுத்தவில்லை. அவன் சரியாக 17, 18 வயது நிரம்பப் பெறுதவன் போல் காணப்படுகிருன்; அவனோடு நீ—சீச்சீ! நினைப்பதே அருவருப்பாக இல்லையா? மாஜிஸ்திரேட் ரங்கராஜம் பிள்ளையின் புதல்வி யிப்படி யிப்படி நடக்கின்றுளென்று ஊரார் தெரிந்தால்....ஐயோ....

ரத்னு:—எப்படிச் சொல்வார்கள் ஊரார்! உங்களைப் பற்றிப் "பக்தவத்சலம் பிள்ளையின் புதல்வராகிய ஆத்மநாதப்பிள்ளை சாத்தூர்க்கோமளத்திடம் சிநேகம் பண்ணினர்; மதுரை ஸ்திரீ பார்ட் கமலவேணியைக் கட்டியழுதார்; மானுமதுரைக் குப்பம்மாளுக்கு 10 ஆயிரம்ரூபாயை வாரியிறைத்தார்; கீழத்தெரு ரங்கத்துக்கு ஒரு வீடு வாங்கிக் கொடுத்தார்; ஸ்ரீ வில்லிப்புத்தூருக்கும் விருதுநகருக்கும் வாரத்தில் ஏழு தரம் ரயிலேறிப் போகிருர்" என்றெல்லாம் சொன்னல் அதில் பொருளில்லை போலிருக்கிறது; அப்படிப்பட்ட ஒருவரின் மனைவி ஒரு வாலிபனிடம் பேசினளென்றல் அது ஒரு பெரிய அவதூறு! அப்படி யாரேனும் அவதூறு சொன்னல் அவர்களிடம் உங்கள் கதையையும் என்னோடு நடந்துகொள்ளும் முறையையும் விளக்கிக் கூறினேனுனல் என்ன சொல்வார்கள்! எல்லோரும் உங்கள் நடவடிக்கைகளை ஒத்துக்கொண்டு விட்டாலும் இந்த உலகில் ஒருவர் "ரத்னம்பாளும் இருந்திருந்து ஏழு வருடம் பார்த்தாள்; கடைசியில் கதியில்லையென்று தெரிந்ததும் தவருன வழியைப்பற்றத் தொடங்கி விட்டாள்" என்று கூறமாட்டார்களா?

இந்த வார்த்தைகள் ஆத்மநாத பிள்ளையின் மனதைச் சாலவும் சுட்டன.

உடன் அவர்:—நான் செய்ததற்குப் பதிலாகத்தான் இதனைச் செய்கிருயோ?

ரத்னு:—முற்றிலும் பதிலாகவே யல்லாமற் போனலும் அல்லும் பகலும் தனியாக இருக்கும் எனக்கு ஒரு ஆடவன் துணையிருந்தாலென்ன! எந்த காலத்தில் நீங்கள் இங்கு வாமலே போய்விட்டாலும் போய்விடக் கூடும் போலிருக்கிறது; அப்படியானல் எனக்குத் துணைக்காவது ஒரு............

ஆத்ம:—ரத்னு! நான் உன்னைப் பிரிந்து இருப்பேனு? என் கட்டிக் கரும்பே...........

என்றவாறே நெருங்கிப் பிடிக்கப் பார்த்தான்.

ரத்னு:—போதும் போதும்; வர்ணனைகள் தேவையில்லை. நான் கரும்பேயல்ல...........

(என்று ஒதுங்கி நின்றுள்.)

ஆத்ம:—யார் ரத்தினு சொன்னீர்கள்? நீ சொன்ன கோமளமும் கமலமும், கமலவேணியும், குப்பம்மாளும் ரங்கமும் உன்னோடு ஒப்பிடப்பட்டால் ஒரு விரலுக்குக்கூட ஈடுநிற்க மாட்டார்களே!

ரத்னு:—போதும் போதும் உங்கள் பாசாங்கு. என் விரலுக்கு ஈடுநிற்காத ஒருத்திக்குத்தான் 10 ஆயிரம் ரூபாயளித்தீர்கள்; அவளே தஞ்சமென்று ஒரு வருடம் கிடந்ததும் என்னைவிட அவள் அழகு குறைந்ததுதான் காரணம் போலிருக்கிறது.

ஆத்ம:—என் ரத்னு! கடந்தகாரியங்களை எடுத்துக் காட்டாதே. நான் இன்றுதான் உன்னைச் சரியாகத் தெரிந்து கொண்டேன். நீ இனி உன் வாழ்க்கையைக் கறைப்படுத்தாதே.

ரத்னு:—இல்லை; அது முடியாது என்னல் முன்னிருந்தது போலினி இருக்க முடியாது. எப்படியோ கங்காதரன் மீது மனதை நாட்டி விட்டேன். அதற்காக உங்கட்குக் கடுகத்தனையேனும் என்னைக் குறைகூற முடியாது; அன்றி உரிமையுமில்லை.

ஆத்ம:—ரத்னு! நீ பேசுவதை யோசித்துத் தானு பேசுகிருய்?

ரத்னு:—வருடம் ஏழாக யோசித்த பிறகு தானே இதனை இன்று கூறுகிறேன்.

ஆத்ம:—அப்படியானல் நான் உன்னை இனிமேல் நாடலாகாது; அல்லவா?

ரத்னு:—அதுவா (சற்று யோசித்து) கங்காதரனுக்குச் சம்மதமிருந்தால்மட்டிலுமே அது கூடும். அவனைக் கலந்து



விட்டுப் பதில் கூறுகிறேன். அதற்கு முன் நீங்கள் மனமாரத்தானு அன்பு காண்பிக்கின்றீர்கள் என்பதும் பாடம் கற்றுவிட்டதாகச் சொல்வது உண்மை தானு வென்பதும் தெரியவேண்டும்.

என்று முடிக்குமுன் ஆத்மநாதன் பல்தரம் வாக்குறுதி கூறினன். அவனது வார்த்தைகள் ஒவ்வொன்றும் உண்மையாகவே மனதிலிருந்து வந்தன. அதனைத் தெரிந்துகொண்ட ரத்னு சற்றுத் தன் கோபத்தைவிட்டு விட்டு நயந்தாள். அப்போது மணி 11 அடித்தது. உடன் இருவரும் படுக்கை புகுந்தார்கள்.

* * *

சுமார் மணி 11-30 இருக்கும். அதானது அவர்கள் நன்கு தூங்கியிருக்க மாட்டார்கள் போலிருக்கிறது. அப்போது யாரோ கைகொடிக்கும் சத்தம் கேட்டது. திடுக்கிட்டு வெளியே நோக்கினன் ஆத்மநாதன். ஆ! என்ன ஆச்சரியம்! என்ன துணிச்சல்! அங்கு—வாரண்டாவில் கங்காதரன் என்ற வாலிபன் தடபுடலாக "டிரஸ்" செய்து தன் காதலி ரத்னுவை நாடி வந்திருக்கின்றுன்! அதனைக் கண்டால் எப்படியிருக்கும் கொண்ட கணவன் ஆத்மநாதனுக்கு?

அவனது கோபம் கரை கடந்த அலை பெறிந்து ஓவெனப் பாயலாயிற்று. உடன் முஸ்லிம் அட்டூழியத்தைக் காணும் வெறி பிடித்த பஞ்சாப் சீக்கியனைப் போல் வெருண்டெழுந்து "அடே நாயே! இவ்வளவு துணிச்சலா உனக்கு?" என்ற வண்ணம் ஓடினன் அவனைப் பார்த்து.

எதிர்பாராது ஆத்மநாதனைக் கண்டுவிட்ட கங்காதரன் பாவம்! 18-வயதும் நிரம்பப் பெருதவன் இருளில் வாரண்டாவை விட்டுக் குதித்து வெளியே ஓடத் தொடங்கினன். தொடங்கவும் ஆத்மநாதன் அவனைப்பின் தொடர்ந்து பாய்ந்தான். ரத்னுவோ இதற்குள் விழித்து விட்டாள். அவள் வாயிலை அடைகையில் கங்காதரனும் ஆத்மநாதனும் ஓடிக் கொண்டிருந்தார்கள்.

இருளில் ஓடிய கங்காதரன் இருபது முப்பது கஜத்தைத் தாவியதும் அவன் தலைப்பாகை கீழே விழுந்து விட்டது. உடன் பார்த்தார் ஓடியவனை—என்ன ஆச்சரியம்! 'அவன்' ஒருபெண். கங்காதரன் வாலிபனல்ல. ஒரு நவயௌவனம் திகழும் பெண்—சுமார் 16 வயதிருக்கும். ஒரு வாலிபன்போல் ஆடையணிந்து வந்திருந்தாள். அவளையே நெடுநாளாகக் கங்காதரன் என்று எண்ணி யிருந்தான் ஆத்மநாதன்!

தன்னுல் 'துரத்தப்பட்டவன்' ஒரு பெண் என்று தெரிந்ததும் ஆத்மநாதன் திடீரென நின்று 'ரத்னு! என்ன இது?' என்று ஆச்சரியப்பட, ரத்னு உடன் "கமலம்! வாடி ஓடாதே" என்றுள்.

கமலம் வந்தாள். பார்த்தான் ஆத்மநாதன். அவள் அடுத்த வீட்டு ஏழைப் பெண் கமலம்! எனவே நடந்தவற்றை ஒருமுறை மனதில் தியானித்து, தன் மனைவி எவ்வளவு பரிசுத்தமானவள் என்று தேர்ந்து, "ரத்னு! நான் உன்னை வீணுகச் சந்தேகப்பட்டேன். நான் தகாத வழியில் மிகமிக உழன்றும் நீ மிகமிகப் பரிசுத்தமாக நடந்து எனக்கு ஒரு நல்ல போதனையைத் தந்ததற்காக உன்னை எப்படிப் பாராட்டுவதென்று தெரியாமல் தவிக்கிறேன். நான் பாவி! உன்னைப்போன்ற ஒரு கற்புக்கரசியை—புனிதவதியை அடைந்தும் தவறிழைத்தேன். என்னை மன்னிப்பாயாக." என்ற வண்ணம் கமலத்தை நோக்கினர்.

அப்போது ரத்னு "நான் எந்தப் போதனையும் தந்துவிடவில்லை. எல்லா வழிகளும் எனக்குக் கற்பித்தவள் கமலாவே!" என்றுள். கமலா நாணத்துடன் ஒதுங்கித் தலைகுனிந்து நின்றுள்.

---

6-ந் தேதி காலை வேலூருக்கு 12 மைல் தூரத்திலிருக்கும் காணியம்பாடியின் சமீபத்தில் ஒரு பெரிய பஸ் விபத்து ஏற்பட்டதில் ஒருவர் மாண்டார். மூவருக்கு காயமேற்பட்டிருக்கிறது.



கும்பியோவில் செட்டியார்களால் மோக்கவும்' தாஞ்னு கும்பயாவில் நடத்தப்படும் பர்மிய திருவிழாவின்போது பயா முன் எடுத்த படம்.



காயமடைந்தவரைச் சுமந்து செல்லும் மோட்டார் வண்டியொன்று ஜப்பான் பெண்கள் தேசியப் பாதுகாப்புச் சங்கத்திற்கு அளிக்கப்பட்டது. அந்த விழாவுக்கு சர்க்கார் உத்தியோகஸ்தர் பலர் வந்திருந்தார்கள். சங்க மெம்பர்கள் மோட்டார் வண்டியைப் பார்வையிடுவதைப் பார்க்க. —Cou.



ஜப்பான் சர்க்கார் மரக்கலங்கள் (பெசபிக் மகாசமுத்திரத்தில் பல விடங்கட்கும் சென்றிருந்தவைகள்) காட்சிக்காக டோக்கியோவுக்கு வந்தன. அப்போது ஜனங்கள் வரவேற்க, அதனை மின்சார தீபத்தால் கப்பல்கள் ஏற்றுக்கொண்டன. Cou.



**சென்னை** மைலாப்பூர் கல்யாணி ஆஸ்பத்திரியில் புதிதாகக் கட்டப்பட்டிருக்கும் கட்டிடத்தை லேடி எர்ஸ்கின் திறந்துவைத்தார். கல்யாணி ஆஸ்பத்திரி காலஞ்சென்ற திவான்பகதூர் N. சுப்பிரமணியம் அவர்களால் தம் தாயாரின் ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்டதாகும். —P. P. B.



எதோபியத் தெற்குப் போர்முனையில் ஒரு இத்தாலியன் "டாங்க்" ஊர்ந்து செல்கிறது. —Cou.





மகாலே புகுந்த பின்னர் டி போனேவுடன் சேர்ந்து போர் புரிந்த இத்தாலியின் அஸ்காரி சோல்ஜர்கட்கு சுதேசி மாதர்கள் உணவு கொடுக்கிறார்கள். —Cou.



தெற்குப் போர் முனையில் எதோபிய சோல்ஜர்கள் போர் ஆற்றுகிறார்கள். —Cou.



புதிய ஜெர்மன் தேசியக் கொடிக்கு ஜெர்மன் ராணுவத்தினர் விஸ்வாசப் பிரமாணம் செய்கிருர்கள். —Cou.



அமெரிக்கன் நீக்ரோ கேண்மைத் தூதுக் கோஷ்டியைச் சேர்ந்த சிலர் இவ்வாரம் சென்னைக்கு வந்தார்கள். சென்ட்ரல் ஸ்டேஷனில் சிறப்பான வரவேற்புக் கொடுக்கப்பட்டது. —P.P.B.

# காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் கமிட்டி தேர்தல்கள்

### தேவகோட்டை தாலூகா

3–12–35-ந் தேதி மதகுபட்டி திரு. லெ. கண்ணப்பா அவர்களால் நடத்தப் பட்டது. பின் கண்டவர்கள் தேர்ந் தெடுக்கப்பட்டனர்.

(1) திரு. லெ. அழ. சொர்ணநாதன் செட்டியார் (தலைவர்)
(2) „ வெ. முத்தையா (காரிய தரிசி)
(3) „ சுப. சம்பந்தன் (பொக்கிஷ தார்)
(4) „ தி. ம. நடராஜன் (ஜில்லாக் கமிட்டி மெம்பர்)
(5) „ முருகன் மெம்பர்
(6) „ அரு. மு. வீரப்பன் „
(7) „ மெ. சி. மாணிக்க வாசகன் „

### தேவகோட்டை நகர்

டிசம்பர் 3-ந் தேதி மாலை 5 மணிக்கு காரைக்குடி திரு. தி. ம. நடராஜனவர் களால் நடத்தப்பட்டது. பின் கண்ட வர்கள் தேர்ந் தெடுக்கப்பட்டனர்:—

(1) திரு. மு. கர்சிநாதன் அவர்கள் (தலைவர்)
(2) „ கண. கதிரேசன் அவர்கள் (காரியதரிசி)
(3) „ மு. ராம. லெ. ராம. அண்ணா மலை செட்டியாரவர்கள் (பொக்கிஷதார்)
(4) சேவு. லெ. ராம. நாராயணன் செட்டியாரவர்கள் (ஜில்லாக் கமிட்டி மெம்பர்)

மெம்பர்கள்

(5) „ ராம. சித. சிதம்பரம்.
(6) „ ராம. சுப்பிரமணியம்.
(7) „ சாமி அருணாசலம்.

### சிவகங்கை தாலூகா

சிவகங்கை தாலுகாக் காங்கிரஸ் தேர்தல் 5–12–35-ந் தேதி மாலை 4 மணிக்கு மதகுபட்டி காங்கிரஸ் ஆபீ சில் தேவகோட்டை ஸ்ரீமான் சேவு. லெ. ராம நாராயணன் செட்டியாரவர் களால் நடத்தப்பட்டது. கீழ்க்கண்ட வர்கள் போட்டியின்றி தேர்ந்தெடுக் கப் பட்டார்கள்.

ஸ்ரீமான் சி. உ. சுப. உடையப்பா, (மதகுபட்டி) தலைவர்.
„ கா. கண. க. வே. வேலாயுதம் செட்டியார், (மதகுபட்டி) காரியதரிசி.
„ வெ. கண்ணப்பா, (மதகு பட்டி) பொக்கிஷதார்.
„ ப. நா. சொக்கலிங்கஞ் செட்டி யார், (அலவாக்கோட்டை) கமிட்டி மெம்பர்.
„ கண. முத்தையா (மதகுபட்டி) „
„ கு. பெரி. சொலைக்குட்டி அம் பலம் (அலவாக்கோட்டை) கமிட்டி மெம்பர்.

ஸ்ரீமதி பி. நா. சொ. விசாலாட்சி அம்மாள், (அலவாக்கோட்டை) கமிட்டி மெம்பர்.

ஸ்ரீமான் பி. நா. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் ஜில்லாக் கமிட்டி மெம்பராகவும் தேர்ந்தெடுக்கப் பட் டார்

### திருப்பத்தூர் தாலூகா

திருப்பத்தூர் தாலூகாக் காங்கிரஸ் தேர்தல் 6—12—35-ந் தேதி மாலை 4 மணிக்கு கோட்டையூர் வைரவன் கோவில் கட்டிடத்தில் பாகனேரி S. O. S. P. உடையப்பா அவர்களால் நடத்தப் பட்டது. சுமார் 90 மெம் பர்கள் வரை தேர்தலில் கலந்து கொண்டார்கள். தேர்தல் விபரம் வருமாறு:—

கமிட்டித் தலைவராக காரைக்குடி கோட்டையூர் தான் ஸ்ரீமான் A. S. ஸ்ரீனிவாசன் பி. ஏ. பி. எல். அவர்களும், பொக்கிஷ தாராக திருப்பத்தூர் ஸ்ரீமான் வீர. சுப்பையா பிள்ளை அவர்களும் போட்டி யின்றி தேர்ந் தெடுக்கப்பட்டனர். போட்டி ஏற்பட்ட ஸ்தானங்களின் தேர்தல் முடிவு வருமாறு:—

காரியதரிசி

ஸ்ரீ S. கந்தசாமிப்பிள்ளை (காரைக்குடி) 59 ஓட்டுகள்.
ஜனுப் முகம்மது சுல்தான் பக்தாதி (திருப்பத்தூர்) 13 „

மிகுதியான வாக்குகள் கிடைத்த ஸ்ரீமான் கந்தசாமிப்பிள்ளை காரியதரிசி யாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ஜில்லாக் கமிட்டி மெம்பர்

ஸ்ரீமான் R. சாமிநாதய்யர் (கோட்டையூர்) 81 ஓட்டுகள்
ஜனுப் முகம்மது சுல்தான் பக்தாதி (திருப்பத்தூர்) 6 „

மிகுதியான ஓட்டுகள் கிடைத்த ஸ்ரீமான் R. சாமிநாதய்யர் தேர்ந் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

கமிட்டி மெம்பர்கள்

ஸ்ரீமான் R. சாமிநாதய்யர் (கோட்டையூர்) 81 ஓட்டுகள்
„ வயி. ராம. அருணாசலம் (ஷையூர்) 80 „
„ S. ராமமூர்த்தி (பள்ளத்தூர்) 7 „
„ நா. அரு. அருணாசலம் செட்டி யார் (கொத்தமங்கலம்) 80 „
„ சொ. நாராயணன் (காரைக்குடி கோட்டையூர்) 66 „

மிகுதியான ஓட்டுகள் கிடைத்த ஸ்ரீமான்கள் R. சாமிநாதய்யர் (2) வயி. ராம. அருணாசலம் (3) நா. அரு. அருணா சலம் செட்டியார் (4) சொ. நாராயணன் ஆகிய நால்வரும் தேர்ந் தெடுக்கப்பட் டார்கள்.

### காரைக்குடி ஜில்லா

காரைக்குடி நகரக் காங்கிரஸ் சபைத் தேர்தல் 7–12–35-ந் தேதி மாலை மணி 4-30-க்கு காரைக்குடி ஜில்லாக் காங் கிரஸ் காரியாலத்தில் ஜில்லாக் கமிட்டித் தலைவர் ஸ்ரீமான் சி. உ. சுப. உடை யப்பா அவர்களால் நடத்தப்பட்டது. கீழ்கண்டவர்கள் போட்டியின்றி தேர்ந் தெடுக்கப் பட்டார்கள்.

ஸ்ரீமான் ராய. சிதம்பரம் செட்டியார் அவர்கள், தலைவர்.

„ K. K. N. லெட்சுமணன், காரியதரிசி.

„ சா. கணேசன், பொக்கிஷதார்.

„ டாக்டர் சுப்ரமணியம், கமிட்டி மெம்பர்.

„ சித. ராமநாதன், ஷை

„ சுப. முத்தையா செட்டியார் ஷை

சுவாமி சிவப் பிரசாத் ஷை

டாக்டர் சுப்ரமணியம் ஜில்லாக் கமிட்டி மெம்பர்.

குறிப்பு:—காரியதரிசி ஸ்தானத்திற்கு அபேட்சகராக நின்ற திரு. N.S. கணபதி அவர்கள் தொழில் சேவை சந்தா முழுதும் கொடுக்காததாலும் வாபஸ் பெற்றுக் கொண்டதாலும், கமிட்டி மெம்பர் ஸ்தானத்திற்கு அபேட்சகராக நின்ற ஸ்ரீமான் உண்ணிக் கிருஷ்ணன் வாபஸ் பெற்றுக் கொண்டதாலும் தேர்தலில் போட்டி ஏற்படவில்லை.

### மானாமதுரை தாலூகா

மானாமதுரை தாலுகாக் காங்கிரஸ் தேர்தல் 8-12-35 மாலை 5 மணிக்கு மானாமதுரை காங்கிரஸ் கட்டிடத்தில் காரைக்குடி ஸ்ரீமான் S. கந்தசாமிப் பிள்ளை அவர்களால் நடத்தப்பட்டது. கீழ்க்கண்டவர்கள் போட்டி யின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

தலைவர்

ஸ்ரீமான் S. காளிமுத்துப் பிள்ளை, மானாமதுரை.

காரியதரிசி

ஸ்ரீமான் N. ராமசாமி ஐயர், மானாமதுரை.

பொக்கிஷதார்

ஸ்ரீமான் பூ. கோபால்சாமி பிள்ளை, மானாமதுரை.

கமிட்டி மெம்பர்

ஸ்ரீமான் P. S. கிருஷ்ணசாமி ஐயங்கார், மானாமதுரை.

ஸ்ரீமான் V. ராமநாத சர்மா, மானாமதுரை.

ஸ்ரீமான் S. ரெத்தினம் பிள்ளை, மானாமதுரை.

ரா. ப. ராமசாமி, முத்தனேந்தல்.

ஸ்ரீ பூ. கோபால்சாமி பிள்ளை ஜில்லாக் கமிட்டி மெம்பர்.

---

### அகில இந்திய சனாதன தர்ம மகாநாடு

---

வரப்போகும் அர்த்த கும்ப விழா வன்று அலகாபாதில் அகில இந்திய சனாதன தர்ம மகாநாடு நடைபெறும். பண்டித மதன்மோகன மாளவ்யா, தர்பங்கா மகாராஜா, பண்டித தீனதயாள் சர்மா ஆகியோர் மகாநாட்டின் மூன்று கூட்டங்கட்கும் தலைமை வகிப்பார்கள். இம்மகாநாடு டாக்டர் அம்பெத்காரின் மத மாற்றத்திற்கு நிவாரண முறைகளைத் தேட முயலும்.





# சுதந்திரம் வேண்டும் தொலை நாடு

## பிலிப்பைன் தீவுகளின் எதிர்காலம்

(ஜி. எல். கிர்க்)

[வெள்ளையர்களது ஆட்சியில் சிக்குண்டு பல வருடங்களாக விடுதலைக்காக பெரும் கிளர்ச்சி செய்துவரும் நாடுகளில் பிலிப்பைன் நாடும் ஒன்றாகும். அந்நாடு ஜப்பானியர்களுக்குச் சொந்தமான ஜப்பானுக்கு தெற்கிலும் ஆங்கிலேயருக்குச் சொந்தமான ஆஸ்திரிலேயாவுக்கு வடக்கிலும் சுமாத்ரா ஜாவா போர்னியோ போன்ற கருப்பு ஜாதியார்கள் வசிக்கும் தீவுகளின் கிழக்கிலும் இருக்கின்றது. அந்நாடு மிக செழிப்பாயிருப்பதோடு அந்நாட்டவர்கள் நாகரிகமடைந்த மக்களாவார்கள். எங்ஙனம் நம்நாடு 5000 மைல்களுக்கப்பாலுள்ள பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் ஆளப்படுகிறதோ அதேபோல பிலிப்பைன் தீவுகளும் 3000 மைலுக்கப்பாலுள்ள அமெரிக்கா ஐக்கிய நாட்டு அரசாங்கத்தாரால் ஆளப்படுகின்றது. அமெரிக்கர் முதலில் உலகில் குடியாட்சியைக் கண்டவர்களென்றும், அடிமை வியாபாரத்தைத் தடைசெய்தவர்களென்றும் பெருமை பேசிக் கொண்டாலும் பிலிப்பைனுக்குக் குறிப்பிடத் தகுந்த சுதந்திர மெதனையும் கொடாதிருந்து வருகிறார்கள். அவர்களின் செய்கையைப் பார்த்தால் வெள்ளைக்காரர் எந்த நாட்டவராயினும் சுதந்திரமளிக்கும் குணத்தோடு சம்பந்தமில்லாதவர்கள் தான் போலிருக்கிறதென்ற சந்தேகம் வந்துவிடும். இங்கு ஒரு வெள்ளைக்காரர் எழுதிய கட்டுரை யொன்றை மொழிபெயர்த்துத் தருவோம். அதன்மூலம் அமெரிக்கர் மனோபாவம், சுதேசிகள் நிலை, ஜப்பான் ஆசை முதலியவெல்லாம் விளங்கும்.]

1935 நவம்பர் 15-ந் தேதி பிலிப்பைன் தேச சரித்திரத்தில் ஒரு விசேஷ நாளாகும். ஐக்கிய நாட்டு அரசாங்கம், பிலிப்பைன் தீவுகளில் தன்னுடைய அதிகாரத்தை எத்தனை குறைக்க முடியுமோ அத்தனை குறைத்துக்கொண்டு, பத்து வருடங்களுக்கு அப்புறம் பிலிப்பைனர்களுக்கு சர்வ சுதந்திரமுமளித்துவிட்டு தங்களது தொடர்பை முற்றிலும் விலக்கிக்கொள்ளும்.

### பொதுஜன விருப்பம்

இங்ஙனம் பரிபூரண சுயராஜ்யத்திற்குரிய வழிகோலப்பட்டும் பிலிப்பைன் தீவுகளில் மகிழ்ச்சி காணப்படவில்லை. சென்ற மே மாதம் நடந்த ஸர்வஜன வோட்டெடுப்பில் பூரண சுதந்திரத்துக்கு மிகப் பெரும்பான்மையான வோட்டுகள் கிடைத்தாலும் அந்தரங்கமாக நோக்கும்பொழுது வியாபாரத் துறையிலும் அரசியல் துறையிலுமுள்ள தலைவர்கள் பல காரணங்களால் மகிழ்ச்சியுடையவர்களாகக் காணப்படவில்லை. பொதுவாக உலக நிலைமையையும் சிறப்பாகக் கீழ் நாடுகளின் நிலைமையையும் கவனித்தால் பூரண சுதந்திரம் கிடைத்த பின்னர் அதைக் காப்பாற்றிக்கொண்டு போக முடியுமா என்ற பயமே இதற்கு முக்கிய காரணம்.

தற்போதைய சுதந்திர சட்டத்தின்படி அமெரிக்கா ஐக்கிய நாடுகளிலிருந்து பிரிந்த பின்னர் பிலிப்பைன் நாட்டிலுள்ள பொருளாதார நிலைமையை சமாளித்துக் கொண்டு போவது மிக சிரம சாத்தியமான விஷயம். பிலிப்பைன் நாட்டிலுள்ள பொருளாதார கட்டுப்பாடு முறிந்து அதனால் குழப்பமேற்படுமாகில் மஞ்சூரியாவில் செய்ததைப் போன்று இதை யொரு காரணமாக வைத்துக்கொண்டு ஜப்பான் தலையிடக்கூடும். அப்போது ஜப்பானை எங்ஙனம் தடுக்க முடியும்? ஜப்பான் ஏகாதிபத்தியத்தை இலேசாக வெண்ணி விடுவதற்கில்லை; ஆதலின் சுதேசித் தலைவர்கள் அமெரிக்க ஐக்கிய நாட்டு அரசாங்கம் பிலிப்பைன் நாட்டில் சிறிதளவாவது பொருளாதார சம்பந்தமும் அரசியல் சம்பந்தமும் கூட வைத்துக் கொள்ளும்படி ஐக்கிய நாட்டு அரசாங்கத்தைக் கேட்கக்கூடும்.

### பிலிப்பைன் வரலாறு

கூபா நாட்டிற்கு சுதந்திர மளிப்பதற்குப் பரிசாக பிலிப்பைன் தீவுகள் ஸ்பெயின் தேசத்தினரிடமிருந்து அமெரிக்காவிற்குக் கிடைத்தது. முதலில் அந்நாட்டின் எல்லையற்ற செழுமையைக் கண்டு மயங்கினர். பின்னர் அன்னிய நாட்டிலுள்ளவர்களும் சொந்த நாட்டிலுள்ள குடியரசுக் கட்சியினர்களும் அமெரிக்காவின் பாசாங்கைப் பலமாகக் கண்டிக்கவே அமெரிக்காவின் குடியரசுத் தலைவராக விருந்த மாகின்லி என்பார் "இறைவனருளால் எங்களது ஆளுகைக்கு வந்து சேர்ந்த மக்களின் விடுதலைக்கும் நலத்திற்குமான வழிகளில் நாங்கள் உழைப்போமே யொழிய எங்களுடைய அதிகாரமும் லாபமும் பெருக நாங்கள் வேலை செய்யப் போவதில்லை." என்று பகிரங்கமாகக் கூறினார். ஆரம்பம் முதல் அமெரிக்க அதிகாரிகள் பிலிப்பைன் மக்கள் பூரண சுதந்திரம் விரும்பும் பக்ஷத்தில் அதை கொடுத்து விட வேண்டுமென்ற கருத்துடன்தான் முன்னேற்றமான முறைகளில் ஆட்சி செலுத்தி வந்தார்கள். பிலிப்பைன் அரசியல் வாதிகள் சுதந்திரத்தின் மேன்மையை நன்கு உணர்ந்திருந்தார்கள். சுதந்திர வேட்கை பிலிப்பைன் மக்கள் மனதில் வேரூன்றி விட்டது. ராஜ தந்திரிகளோ எதிர் காலத்திலேற்படக்கூடிய சில சிக்கல்களைக் கருதி ஒரு மாதிரியான முடிவுக்கு வரவேண்டுமென்று எண்ணுகிறார்கள். ஆனால் பாமர மக்களோ பூரண சுதந்திரத்திற்கு ஒரு இம்மி குறைந்தாலும் ஒப்புக் கொள்ள மாட்டோமென்கின்றார்கள். ஆகவே ஒரு முடிவுக்கு வருவதற்கு தடையேற்பட்டிருக்கின்றது.

மகாயுத்தம் முடிந்தது முதல் பிலிப்பைன் தீவினர்கள் அவர்களது கிளர்ச்சியை மிகுந்த ஊக்கத்தோடும் அதி தீவிரமாகவும் செய்துவருகின்றனர். வில்ஸன் ஐக்கிய நாட்டுத் தலைவராகவிருந்த பொழுது பிலிப்பைன் நாடுகளுக்கு சுதந்திரமளிப்பதாக வாக்களித்தார். ஆனால் அதிகார மாற்றம் செய்யும் விஷயத்தில் பொறுப்பு வரையறுக்கப்பட்டது. அவர்களது சுயாட்சி உரிமையை விரிவாக்கி அங்கு உறுதியான அரசாங்க மேற்படும்பொழுது அமெரிக்கா அங்கிருந்து விலகிக்கொள்வதாக வாக்களித்து ஒரு சட்டம் இயற்றப்பட்டது. சென்ற பன்னிரண்டு வருட ஆட்சியின் பயனாக அவர்கள் அவர்களுடைய லக்ஷிய ஸ்தானத்திற்கு அண்மையில் வந்ததாகத் தெரியவில்லை. அடிக்கடி தூது கோஷ்டிகளும் மகஜர்களும் வாஷிங்டனுக்கு அனுப்பப்பட்டு அங்கு மதிப்பாக சுவீகரிக்கப்பட்டன. ஆனால் அமெரிக்கா அன்னியநாட்டு வியாபார விருத்தியிலும் கைத்தொழில் முன்னேற்றத்திலும் கருத்தைச் செலுத்தி அது விஷயங்களிலேயே மூழ்கிக் கிடந்தமையால் பிலிப்பைன் விஷயத்தில் அதிகாரிகளால் சிரத்தை காட்ட முடியவில்லை. இந்த பன்னிரண்டு வருடங்களுக்கிடையில் இரண்டு தடவை பிலிப்பைனிலுள்ள நிலைமையை ஆராய்வதற்காக பரிசிலனைக் கமிட்டிகள் அனுப்பப்பட்டன. ஒவ்வொரு தடவையும் அந்தக் கமிட்டியார் அங்கு மிகுந்த அபிவிருத்தி யிருப்பதாகவும் பொதுக்கல்வி நன்கு பரவியிருப்பதாகவும் சுகாதார முறையும் பொதுஜன அரோக்கியமும் விருத்தியடைந்திருப்பதாகவும் நல்ல ரஸ்தாக்கள் அமைக்கப்பட்டிருப்பதாகவும் சுதேசிகளின் வாழ்க்கை முறை மேன்மையடைந்திருப்பதாகவும் அறிக்கை வெளியிட்டிருக்கிறார்கள்.

இந்த இரண்டு கமிட்டிகளும் விரைவில் பிலிப்பைன் தீவுகட்கு பூரண சுதந்திரமளிப்பது முடியாத காரியமென்று தங்களது அபிப்பிராயத்தை வெளியிட்டு விட்டன. ஐக்கிய நாட்டு அரசாங்கம் அன்னியநாட்டு வியாபாரத்தை அபிவிருத்தி செய்ததால் பிலிப்பைன் தீவுகளிலுள்ள பொருளாதார நிலைமை முன்னேற்றமடைந்தது. 1909 முதல் 1929 வரையிலுள்ள இருபது வருடங்களில் அங்குள்ள ஏற்றுமதி இறக்குமதி வியாபாரம் 370 சதமானம் முன்னேற்றமடைந்திருக்கிறது.

அரசியல் துறையில் அந்த நாடு சுயராஜ்ய மார்க்கத்தில் மிகுந்த முன்னேற்றமடைந்து கொண்டு வருகிறது. பொருளாதாரத் துறையில் அந்நாடு பெரும்பாலும் அமெரிக்காவை எதிர்பார்த்தே இருக்கிறது. பிலிப்பைன் நாடு முற்றிலும் சுதந்திரமடைந்திருக்குமானால் அதன் நிலைமை வேறு விதமாக இருந்திருக்கும். உண்மையில் ஐக்கிய நாட்டு அரசாங்கத்துக்கு தாராளமான இராஜ தந்திர புத்தி கிடையாது. சில வியாபார சம்பந்தமாகவும் பொருளாதார சம்பந்தமாகவுமுள்ள நிர்ப்பந்தங்களைக் கருதியே பூரண சுதந்திர சட்டமியற்றப்பட்டது.

### சமாளிக்க முடியுமா?

அன்னிய நாடுகளின் தொந்தரவு மட்டும் இல்லாதிருக்குமானால் பூரண சுதந்தரமடைந்த பிறகும் பிலிப்பைன் நாடு பலம் குறைந்து தத்தளித்துக் கொண்டிருந்தாலும் நிலைபெற்று வாழ முடியும். அந்தக் கிழக்குப் பிரதேசங்களில் ஏகாதிபத்திய வெறி பிடித்த ஜப்பான் போன்ற சாம்ராஜ்யத்தின் தலையீட்டைத் தடுப்பதற்குப் போதுமான இராணுவப் படையையும் கடற்படையையும் சுதந்திரமடைந்த பிலிப்பைன் அரசாங்கத்தால் வைத்துக் கொள்ளமுடியுமா என்பது சந்தேகத்திற்குரிய விஷயமாகும். அதற்கு இரண்டே இரண்டு வழிகள்தான் உண்டு. அதாவது ஒன்று சர்வதேச சங்கத்தில் சேருவதும், மற்றொன்று ஒரு பிரபல நாட்டாரது தோழமையை வைத்துக் கொள்ளுவதுமாகும். ஆனால் சர்வதேச சங்கத்தாரால் மிகவும் கிழக்கிலுள்ள இந்த நாட்டிற்குத் தகுந்த பாதுகாப்பை அளிக்க முடியுமாவென்பது சந்தேகம்தான். தவிர ஒரு பிரபல நாட்டிற்கு பலக்குறைவான இந்த நாட்டோடு தோழமை வைத்துக் கொள்வதினால் துன்பங்கள் விளையுமாதலால் அத்தகைய தோழமை யேற்படுவதும் சிரமமான காரியமே.

அமெரிக்காவின் தொடர்பு அற்றுப் போனதும் மறுதினமே ஜப்பான் தேசத்து கப்பற்படையை பிலிப்பைன் தீவுகளில் காணலாமென்று ஒருசாரார் கருதுகின்றனர். மஞ்சூரியாவும் வடக்கு சீனாவும் ஜப்பானியர்களுடைய கவனத்தை இன்னும் பல வருடங்கள் ஈர்த்துக்கொண்டிருக்குமென்றும் தவிர ஜப்பானியர்களுக்கு பிலிப்பைன் நாட்டிலுள்ள பிரதேசங்களை கைப்பற்ற வேண்டுமென்ற எண்ணம் அணுத்துணையும் கிடையாதென்றும் இன்னொரு சாரார் கூறுகின்றனர்.

### ஜப்பானியர் ஆதிக்கம்

தற்போது பிலிப்பைன் தீவுகளில் இருபதினாயிரம் ஜப்பானியர்கள் ஸ்திரமாக வசிக்கின்றார்கள். பிலிப்பைன் தீவுகள் குடியேறுவதற்கு தகுந்த இடமாக விருக்கிறது. அங்குள்ள ஜனத்தொகையும் மிகக்குறைவாகும். தவிர அங்கு ஏராளமான பண்படுத்தப்படாத பொருள்களிருக்கின்றன. தங்கம், ஈயம், மாங்கனீஸ், குரோமியம், இரும்பு முதலிய உலோகங்கள் அங்கிருப்பதோடு ஏராளமான மரமும் (Timber) அங்கு அகப்படுகிறது. இவைகளையெல்லாம் ஜப்பான் கவனிக்காதிருக்குமா? ஜப்பான் கண்டிப்பாக அந்நாட்டில் பொருளாதார விஷயங்களிலும் வியாபார விஷயங்களிலும் தலையிட்டே தீரும். ஜப்பான் அங்குள்ள பண்படுத்தப்படாத பொருள்கள் சம்பந்தமான வியாபாரத்தை கைப்பற்றுவதோடு தற்போது ஐக்கிய நாடுகளிருந்து வந்து கொண்டிருக்கும் துணிகள் போன்ற பல பொருட்களை ஜப்பானே 'ஸப்ளை' செய்யத் தொடங்கும். எதிர்கால பிலிப்பைன் அரசியல் வாழ்வில் ஜப்பான் ஓர் தகுந்த இடம் பெறுமென்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

---

### தலைவர் ராஜிநாமா

---

### தமிழ்நாடு புரோகித மறுப்புச் சங்கம்

---

திருச்சி டிச. 5உ

மேற்படி சங்கத்தின் தலைவரான தோழர் டி. வி. சோமசுந்தரம் பி. ஏ. பி. எல். தமது சொந்த வேலை மிகுதியின் காரணமாக இன்று முதல் தமது தலைமைப் பதவியை மட்டும் ராஜிநாமா செய்திருப்பதாக தெரிவிக்கிறார்கள் என மேற்படி சங்க உபதலைவர் தோழர் நீலாவதி அறிவிக்கிறார்.



# "உடலுழைப்பே ஊக்கமுற்றிடும்"

## "இயந்திர யுகம் நிலைத்து நில்லாது"

### காந்திஜி—பிர்லா சம்பாஷணை

காந்திஜி இந்தியாவை நேரான வழியில் நடாத்திச் செல்லுகிறார் என்பதில் அவருக்கிருக்கும் பரிபூரண நம்பிக்கை சம்பந்தமாக காந்திஜிக்கும் ஹரிஜன சேவா சங்கத் தலைவர் திரு. கனசியாம்தாஸ் பிர்லாவுக்கும் வார்தாவில் ஒரு ருசிகரமான சம்பாஷணை நடந்தது.

ஸ்ரீயுத பிர்லா நளிவாடியிலுள்ள தோல் பதனிடும் நிலையத்தி லிருந்து அங்குதான் கண்டவைகளைப் பற்றி மிகுந்த திருப்தியோடு அப்பொழுது தான் திரும்பி வந்தார். ஆனால் வேலைக்குத் தொடர்ச்சியான தியாகமும் குறைவுறாத நம்பிக்கையும் நீண்ட காலத்திற்குத் தேவைப் படுகிறதைக் கண்டு ஆச்சரியமடைந்தார்.

"தோல்பதனிடும் நிலையத்தை நிர்வகிக்கும் நண்பர் மிகவும் சிறு தொகை பெற்றுக்கொண்டு ஊழியம் செய்வதாகத் தாங்கள் கூறுகின்றீர்கள். அது மிகவும் பாராட்டுதற்குரியதே" என்று திரு. பிர்லா கூறினார்.

"அவர் ஓர் பிராமணனும் பட்டதாரியுமாகும். அவர் ஒரு நாளைக்கு எட்டணாவுக்கு மேல் ஊழியம் பெற மறுக்கின்றார். அவரது மனைவி நாள் முழுதுக்கும் மிகச் சிறிய தொகைக்கு வேறோரிடத்தில் வேலை பார்க்கின்றார்" என்று பதிலிறுத்தார் காந்திஜி.

"ஆம். இவைகளெல்லாம் எனக்கு ஆச்சரியமளிக்கின்றன. ஆனால் இந்த இயந்திர யுகத்தில் இது எவ்வளவு காலம் இங்ஙனம் நடைபெறுமென்று கூறுவதற்கில்லை" யென்று பிர்லா கூறினார்.

"இயந்திர யுகத்தின் அருஞ்செயல்களெல்லாம் மறைந்தொழிந்து போய் நமது கையால் செய்யப்படும்



தொழில்களே நிலைத்து நிற்குமென்றும், சுரண்டுதல் நின்றுபோய் உண்மையான ஊழியமே நிலைத்து நிற்குமென்றும் திடமான நம்பிக்கை எனக்கிருப்பதால் எனக்கு இத்தகைய பயமில்லை. இந்த நம்பிக்கை என்னிடம் வேரூன்றி யிருப்பதால்தான் நான் எனது வேலையைச் செய்துகொண்டு போகிறேன். மேலும் நிராசையடையவென்ன விருக்கிறது! அந்தமில்லாத பெரும் கால அளவில் ஒரு சில வருடங்கள் பொருட்படுத்தக் கூடியதன்று. ஸ்டீவன்ஸன் கோலம்பஸ் முதலியவர்களின் வெற்றிக்கு அவர்களது தளரா நம்பிக்கையே முக்கிய காரணமாகும். நம்பிக்கை என்னிடம் நிலைத்து நிற்பதோடு எனது நம்பிக்கைக்கு எதிராக நிற்பவைகளெல்லாம் ஒழிந்து போகுமென்ற திடமான நிச்சயம் உண்டு. இந்தியா ஓர் யந்திரத் தொழில் நாடாக மாறுமானால் சுரண்டுவதற்குப் பிறவிடங்களை கண்டு பிடிப்பதற்கு ஒரு நாதிர்ஷா தேவைப்படுமென்பதையும், பிரிட்டன் ஜப்பான் அமெரிக்கா, ருஷ்யா, இத்தாலி முதலிய நாடுகளோடு கடற்படை இராணுவப்படை முதலியவற்றில் நாமும் போட்டி போடவேண்டுமென்பதையும் நீங்கள் உணரவில்லையா? இத்தகைய போட்டிகளை நினைக்கும்பொழுது எனது சிரம் சுழலுகின்றது. இயந்திர யுகம் மனிதர்களை இயந்திரங்களாக மாற்ற உத்தேசிக்கும்பொழுது நான் இயந்திரமயமான மனிதர்களை அவர்களது பூர்வ நிலையை அடையுமாறு செய்ய முயற்சிப்பேன்" என்று காந்திஜி விடையளித்தார்.

"தங்களுடைய அசைக்க முடியாத நம்பிக்கையை நான் உணருகின்றேன். ஆனால் தங்களது ஆவேசப் பெருக்கில் நீங்கள் எங்களுடன் அனந்த காலம் வாழமாட்டீர்களென்பதை மறந்து விடுகின்றீர்கள். தங்களுக்கு வயதேறிக் கொண்டு வருகிறது. பெரும் பொருள் சேகரம் செய்து தங்களுடைய வேலையை இன்னும் அதிகப்படியான இடங்களில் ஏன் பரவச் செய்யக்கூடாது?" என்று திரு. பிர்லா வினவினார்.

"எனது தேவைக்கு அதிகமாக பொருள் சேகரம் செய்வதில் எனக்கு நம்பிக்கை யில்லை."

"ஆனால் நீங்கள் இருபது அல்லது பத்து மாதிரிக் கிராமங்களாவது நிர்மாணம் செய்யக்கூடாதா?"

"அது அத்தனை இலகுவாகவிருக்கும் பக்ஷத்தில் உங்களுக்கே உங்களுடைய பணத்தால் செய்யக்கூடும். அது இலகுவல்லவென்பதை நானறிவேன். பணமென்னும் மந்திரக் கோலால் ஒரு மாதிரி கிராமத்தை (Model village) நிர்மாணம் செய்துவிட முடியாது. முழுப் பயன்தரும் விஷயங்களில்தான்

## காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் கூட்டம்

—————

"காரைக்குடி
தனி ஜில்லாவாகவே இருக்க
வேண்டும்"

—————

"ஓட்டர்கள் வேண்டுகோளுக்கு
இணங்குவது சதியாலோசனை!"

—————

காரைக்குடி, டிசம். 9

காரைக்குடி ஜில்லாக் காங்கிரஸ் கூட்டம் நேற்று மாலை 5½ மணிக்கு மானு மதுரை காங்கிரஸ் கட்டிடத்தில் ஸ்ரீமான் சி. உ. சுப. உடையப்பா அவர்கள் தலைமையில் நடைபெற்றது. மொத்தம் 14 மெம்பர்களில் 11 பேர் விஜயஞ் செய்திருந்தனர்.

முதலாவதாக 24–11–35-ந் தேதி நடைபெற்ற ஜில்லாக் கமிட்டிக் கூட்டத்தில் சிவகங்கை தாலுகாக் கமிட்டித் தேர்தலை சொக்கநாதபுரத்தில் நடத்துவது என்று தீர்மானித்திருப்பது மிகவும் அசௌகரியம் என்று மேற்படி தாலுகாக் கமிட்டி மெம்பர்களில் எழுவர் அறிவித்து மதகுபட்டியிலேயே தேர்தலை நடத்தவேண்டுமென்று கேட்டுக் கொண்ட பின்னர், சிவகங்கை தாலுகா எலக்ஷன் ஆபீசரான ஸ்ரீ சேவு. லெ. ராம. நாராயணன் செட்டியார்வர்களும் இதே அபிப்பிராயம் அறிவித்திருந்தார். ஆதலால், கமிட்டியின் அவசரக் கூட்டம் கூட்டப் போதுமான அவகாசமில்லாததால், சிவகங்கை தாலுகா தேர்தலை மதகுபட்டியில் கூட்டுவதா அல்லது ஏற்கனவே தீர்மானித்திருந்ததை உறுதி செய்வதா என்று காரியதரிசியால் மெம்பர்களுக்கு ஓர் சுற்றறிக்கை அனுப்பப் பட்டிருந்தது. இதற்கு 12 மெம்பர்கள் மதகுபட்டியிலேயே தேர்தலை நடத்துவதென்பதை ஆதரிப்பதாக அறிவித்திருந்தார்கள். ஆதலால், இக் கூட்டத்தில் மதகுபட்டியில் தேர்தல் நடத்துவதென்று மெம்பர்கள் எழுதியிருப்பதை உறுதிசெய்ய வேண்டுமென்று காரியதரிசி ஸ்ரீ. தி. ம. நடராஜன் கேட்டுக் கொண்டார். இதனை ஆட்சேபித்து ஸ்ரீமான் R. V. சாமிநாதன் பேசுங்கால் சொக்கநாதபுரத்தில் மற்றொரு தேர்தல் நடந்திருப்பதாகவும் அதனை மாற்றுவதாகச் செய்த ஏற்பாடுகள் யாவும் பெரும் சதியாலோசனையின் பயன் என்றும், இது நிர்வாக விதிக்கு மாறானது என்றும் கூறினர். அதற்கு ஸ்ரீ. தி. ம. நடராஜன் பதில் கூறுகையில் சொக்கநாதபுரத்தில் தேர்தல் நடத்துவது பெரும்பான்மையான ஓட்டர்களுக்கு அசௌகரியமென்று தாலுகாக் கமிட்டியாரும், ஓட்டர்களில் பலரும் அறிவித்திருக்கிறார்கள் என்றும் இதனை ஜில்லாக் கமிட்டி மெம்பர்களிலும் மிக பெரும்பாலோர் ஆதரித்திருக்கிறார்கள் என்றும், மெம்பர்களின் வசதியைக் கவனித்து முடிவு செய்வதை எங்ஙனம் சதியாலோசனை என்று கூறலாம் என்றும், ஸ்ரீமான் சாமிநாதன், "சதியாலோசனை" என்று கூறியதை வாபஸ் பெற்றுக்கொள்ள வேண்டும் என்றும் வற்புறுத்தினர். ஸ்ரீ சாமிநாதன் மறுக்கவே, ஸ்ரீ. தி. ம. நடராஜன் "சதியாலோசனை செய்ததாக" ஸ்ரீ சாமிநாதன் கூறியதை அழுத்தமாகக் கண்டிப்பதாக ஓர் தீர்மானம் கொண்டு வந்தார். பின்னர், கமிட்டித் தலைவரின் வேண்டுகோளின் பேரில் ஸ்ரீமான் சாமிநாதன் "சதியாலோசனை" என்ற வார்த்தையை வாபஸ் பெற்றுக் கொண்டார். பின்னர், மதகுபட்டியில் தேர்தல் நடத்துவதென்ற மெம்பர்கள் அபிப்பிராயம் உறுதி செய்யப்பட்டது.

II. சமீபத்தில் நடைபெற்ற ராமநாதபுரம் ஜில்லாக்கமிட்டிக் கூட்டத்தில் காரைக்குடி, ராமநாதபுரம் ஆகிய இரு ஜில்லாக்களையும் ஒன்று சேர்க்க வேண்டுமென்று தீர்மானித்திருப்பதாகத் தெரிவதால், காரைக்குடி இப்பொழுது இருப்பது போலவே ஒரு தனி ஜில்லாவாக இருந்து வரவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

III. மானுமதுரை காங்கிரஸ் கட்டிடத்திற்கு ஜில்லாக்கமிட்டியிலிருந்து ரூ 75 பொருள் உதவி செய்வதென்று தீர்மானிக்கப் பட்டது. இத்தொகையில் ரூ 40, காரியதரிசியால் மானுமதுரைக் கமிட்டியாருக்கு கூட்டம் முடிந்தவுடன் கொடுக்கப்பட்டது.

அடுத்த கூட்டத்தை 11–12–35-ந் தேதி அலவாக் கோட்டையில் கூட்டுவதென்று முடிவு செய்யப்பட்டது.

—————

நான் பொதுமக்களிடமிருந்து பணம் பெறுவது. இப்பொழுது அதிகப்படியாக மத்திய நிதிகள் ஏற்படுத்துவதை நான் எதிர்க்கிறேன். ஆண்டுதோறும் 29000 ரூபாய் செலவேற்படக்கூடிய பல ஹரிஜன வித்தியாலயங்களும் ஆச்சிரமங்களும் கூர்ஜர நாட்டிலிருக்கின்றன. ஏன் நீங்கள் கூர்ஜரத்தில் வேலை செய்யக் கூடாது? கூர்ஜரத்தில் ஹரிஜன ஊழியம் செய்வதற்கு பணம் திரட்டவேண்டிய பொறுப்பு குஜராத்திகளுடைய தல்லவா? அவர்களால் இது செய்ய முடியாது போனால் வெளியுதவியை நாடுவதைவிட அந்த ஸ்தாபனங்களை மூடிவிடுவதே மேலானதாகும்.

# மதிப்புரை

## சினிமா நேசன்

சினிமா நேசன் என்ற பெயர் பூண்டு டிசம்பர் 1-ந் தேதி முதல் ஒரு அரையணு பத்திரிகை பிரசுரிக்கப்பட்டு வருகிறது. இதன் ஆசிரியர் திரு. ஆர். எஸ். கோபாலன். இவர் மிக "அவலமான நிலையில் நின்று தவிக்கும் கலா தேவிக்கு உதவி செய்யும்" பொருட்டு பத்திரிகையை ஆரம்பித்திருப்பதாகத் தெரிவிக்கிறார். சினிமாவின் பெயரால் எத்தனையோ பத்திரிகைகள் தோற்றி விட்டதைத் தெரிந்த நேயர்கள் இதனையும் ஏற்றுக்கொள்வார்களென்று நினைக்கிறோம். இப் பத்திரிகை ஒன்று விட்ட ஞாயிறு தோறும் வெளிவரும். வருட சந்தா ரூபாய் 1; வெளி நாட்டுக்கு ரூபாய் 2. கிரௌன் 1x8 அளவிலிருக்கும் இப் பத்திரிகையில் 18 பக்கங்களிருக்கின்றன. சினிமா நேசன், காரியாலயம், 46, வெத்திலைக்காரத் தெரு, திருச்சி என்ற விலாசத்திற்கு எழுதிப்பெற்றுக் கொள்ளலாம்.

## சில்வர் ஸ்க்ரீன்

இது ஆங்கிலத்தில் சென்னையிலிருந்து வெளியாகும் மற்றொரு மாத விருமுறை சினிமாப் பத்திரிகை. இதன் ஆசிரியர் திரு. என். கிருஷ்ணசாமி. நம் பார்வைக்கு வந்த முதல் இதழில் ஹாலிவுட் பற்றிய சில குறிப்புகள், தமிழ் சினிமாப்பட உற்பத்தி, ஒரு கதை, தமிழ் ஸ்டுடியோ செய்திகள், ராதா கல்யாணத்தின் விமர்சனம் முதலியவை காணப்படுகின்றன. பத்திரிகை ஆர்ட் காகிதத்தில் நிரம்ப படங்களைத் தாங்கி சுமார் 40 பக்கங்களுடனமைந்திருக்கிறது. ஆனால் விலை 1 அணாவே. அழகான அச்செழுத்துக்களையும் எழுத்துப் பிழையின்மைகளையும், பெற்றிருந்தால் சரியாக சில்வர் ஸ்க்ரீன் ஆங்கில நாட்டு சினிமாப் பத்திரிகைகட்கு ஈடு நிற்கும்: பத்திரிகை கிடைக்குமிடம்:— சில்வர் ஸ்க்ரீன் ஆபீஸ், எல்ட் ஹாம்ஸ் ரோடு, தேனாம்பேட்டை, சென்னை.

## சினிமா மணி

இப்பெயருடன் மற்றொரு சினிமாப் பத்திரிகை சென்னையிலிருந்து வெளி வருகிறது. இதன் ஆசிரியர் திரு. டி. ஜே. பூபேக்திரன். இச் சினிமாப் பத்திரிகையில் நாடகம், நடனம், ரேடியோ செய்திகள் வெளி வருமென்று செல்லப் படுகிறது. தனி பிரதி விலை அரையணா.

## ரெட்டி நாடு

திரு கே. பி. பட்டாபிராமனை ஆசிரியராகவும் திரு கே. பி. பாலசுந்தரத்தை கௌரவ ஆசிரியராகவும் கொண்டு ரெட்டி நாடென்னும் பத்திரிகை திருச்சியிலிருந்து பிரசுரமாகிக் கொண்டிருக்கிறது. இப்பத்திரிகை ரெட்டியார் சமூக நலங்கருதியே உழைக்குமென்பதோடு எந்தக் கட்சியையும் சாராமலும் பிற்போக்கான கட்சிகட்கு இடம் கொடுத்து விடாமலும் வாழ்க்கை நடாத்துமென்று கூறுகிறது. அதில் வெளியாகும் கட்டுரைகளால் கிராமத் தொழிலுக்கு ஆதரவளிக்குமென்று நிச்சமாக நம்பலாம். கிரௌன் 1x2 அளவில் அமைந்திருக்கும் இப்பத்திரிகை 16 பக்கங்களுடையது. வருட சந்தா 2 ரூபாய். கிடைக்குமிடம்:— ரெட்டிநாடு காரியாலயம், பெரிய கடை வீதி, திருச்சினாப்பள்ளி.

## தமிழ் வரிவடிவ ஆராய்ச்சி

சிங்கப்பூர் ஆயுர்வேத சித்த வைத்தியரும் 'காந்த ரசம்' கம்பெனியின் சொந்தக்காரருமான அறிஞர் அ. சி. சுப்பையா அவர்களால் எழுதப்பட்ட தமிழ் வரிவடிவ ஆராய்ச்சி நம் பார்வைக்கு வந்துளது. அதில் தமிழ் மொழியின் பரப்பு, செல்வாக்கு, காலத்தால் ஏற்பட்ட சில மாற்றங்கள், எழுத்துக்களின் இயல்பு முதலிய பல விஷயங்களைப் பற்றி விரிவாகக் குறிப்பிட்டு விட்டு, தற்போது குடியரசுப் பத்திரிகை கையாண்டு வருவதுபோன்ற எழுத்து முறையை வற்புறுத்துகிறார். அம் முறைப்படி தமிழின் மொத்த எழுத்துக்கள் (குறிப்பு எழுத்துக்கள் 7 உட்பட மொத்தத்தில்) 53 ஆகிவிடும். அப்படியானால் சௌகரியமான டைப் ரைட்டர் அமைப்பதற்கும், கூடிய வரையிலும் விரைவாக டைப் செய்வதற்கும் சௌகரிய மேற்படுவதோடு அச்சுக் கோர்ப்பதற்கும் தமிழ் பயில்வதற்கும் எளிதாக விருக்கும். இந்தக் கருத்தை ஆங்காங்கே ஆசிரியர் வற்புறுத்தியுள்ளார். புஸ்தகம் முழுதும் பெரும்பான்மையும் அவர் விரும்பும் முறையிலேயே எழுத்துக்கள் அமைந்திருக்கின்றன. ஆங்காங்கே சில எழுத்துப் பிழைகளை நீக்கினால் எவரும் இப்புத்தகத்தை வாசிக்கத் தவறலாகாதென்னலாம். கிரௌன் 1x8 அளவில் 56 பக்கங்களில் அமைந்திருக்கும் இப்புஸ்தகத்தின் விலை அணா மூன்று. கிடைக்குமிடம்:—பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகம், ஈரோடு.

## திருக்குறள் நாட் குறிப்பு

திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்டி (சென்னை) லிருந்து திருக்குறள் நாட் குறிப்பு என்ற பெயருடன் 1936-ம் வருடத்து பாக்கட் டயரியொன்று வெளியிடப் பட்டிருக்கிறது. அதில் சிறிய அளவில் கோர்ட்டு கட்டணம், தபால் கட்டணம், பஞ்சாங்கம், வருமான வரி விவரம் முதலியவை அடங்கி யிருக்கின்றன. நாட் குறிப்பு எழுதுவதற்கான பக்கங்களில் 731 முதல் 1096 வரையிலுமுள்ள திருக்குறள் சூத்திரங்கள் கருத்துரையுடன் தரப்பட்டிருக்கின்றன. அட்டையில் (முதற் பக்கத்தில்) திருவள்ளுவரின் படமொன்று சைவ உருவத்தில் அச்சிட்டு ஒட்டப் பட்டிருக்கிறது. பொதுவாக டைரி நல்ல காகிதத்தில் அழகாக அமைக்கப் பட்டிருக்கிறது. சாதா பதிப்பின் விலை அணா 5. உயர்ந்த பதிப்பு பென்சிலுடன் கூடியது விலை அணா 6. டைரி கிடைக்குமிடம்:— சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், 6, பவளக்காரத் தெரு, சென்னை.

## சண்டே டிஸ்பாச்

சண்டே டிஸ்பாச் (Sunday Dispatch) என்ற பெயருடன் வெளியாகும் வாராந்த ஆங்கிலப் பத்திரிகையின் முதல் இதழ் நம் பார்வைக்கு வந்தது. இதன் ஆசிரியர் திரு. G. L. N. சௌதிரி. பத்திரிகை தேசீய இயக்கம்பற்றி நிற்குமென்று தெரிகிறது. பல நல்ல கட்டுரைகளும், கூடார்த்தப் படங்களும், இதர சித்திரங்களும் பல பக்கங்களில் காணப்படுகின்றன. கிரௌன் அளவில் 12 பக்கமுடைய இப்பத்திரிகையின் விலை அணா 1. வருட சந்தா உள்நாட்டுக்கு ரூபாய் 3. வேண்டுவோர் சண்டே டிஸ்பாச் ஆபீஸ், 82, அரண்மனைக்காரத் தெரு, சென்னை என்ற விலாசத்திற்கு எழுதுக.



# இந்தியாவின் அரசியல் நிலை

## சிந்தாமணியின் நந்தா மொழிகள்

ஆயிரத்தி தொள்ளாயிரத்தி பத்தொன்பதிற்கும் முப்பத்தி ஐந்திற்கு மிடையிலுள்ள காலத்தில் இந்தியாவிலுள்ள இராணுவச் செலவை குறைப்பதற்கும் இராணுவ முறையை செம்மைப்படுத்துவதற்குமாக பெரும்முயற்சிசெய்யப்பட்டது. இது விஷயமாக பல கமிஷன்களையும் கமிட்டிகளையும் இங்கிலாந்து ஏராளமான பணச்செலவு செய்து ஏற்படுத்தியதே யொழிய யாதொரு நிவாரணமுமேற்படவில்லை. இந்த அபாரமான இராணுவச் செலவினால் அரசியல் சமூக பொருளாதார முன்னேற்றத்திற்கும் கல்வி வளர்ச்சிக்கும் போதிய பணம் அகப்படுவதில்லை. மற்றெல்லோரையும் விட ஆங்கிலேயர்களை நன்கறிந்திருந்தவரும் அவர்கள் மாட்டு அளப்பரிய மதிப்பு வைத்திருந்தவருமான லார்டு சின்ஹா "ரூபா அணா பைஸா சம்பந்தப்பட்ட விஷயங்களில் ஆங்கிலேயர்களை நம்புவதற்கு இடமில்லை" என்று கூறியிருக்கிறார். எப்பொழுதும் பணம் தான் குறியென்றும், அவர்களிடத்தில் மூளையின் வலிமை காணப்பட்டாலும் ஹிருதய விசாலத்தைக் காண்பது அருமையிலும் அருமையென்றும் ஆங்கிலேயரின் குணதிசயங்களைப் பற்றி ஓர் ஆங்கில கனவானே கூறியிருக்கிறார்.

இந்தியாவின் இராணுவ முறையை கவனித்தால் அதிகாரிகட்கு இந்தியர்கள் மீதுள்ள அவநம்பிக்கை நன்கு புலனாகும். 1918-வது வருடம் வரையிலும் இந்தியர்களுக்கு இராணுவத்தில் 'கமிஷண்டு ராங்க்' பதவியளிக்கப் படவில்லை. இப்பொழுதிருக்கும் இராணுவத்தை இந்தியமயமாக்கும் முறையை கவனித்தால் இராணுவம் முழுதும் இந்தியமயமாவதற்கு இன்னும் முன்னூறு வருடங்கள் வேண்டிவரும்.

சைமன் கமிஷன் ஏற்பட்ட பொழுது அதில் ஒரு இந்தியர் கூட இடம் பெறவில்லை. அது பார்லிமெண்டு அங்கத்தினர்கள் மட்டும் கொண்ட ஒரு கமிட்டியாதலால் இந்தியர்களை நியமிக்க முடியவில்லை யென்று சமாதானம் கூறினார்கள். அதுகாலை பிரிட்டிஷ் பார்லிமெண்டில் லார்ட்ஸ் சபையில் லார்டு சின்ஹாவும் காமன்ஸ் சபையில் தோழர் சகலத்வாலாவும் இடம் பெற்றிருந்தமையால் இந்த சமாதானம் முற்றிலும் பொருந்தாது. இந்தியர்களை இழிவாகக் கருதிய அவர்களது மனப்பான்மைக்கு காங்கிரஸ் காரர்களும் மிதவாதக் கட்சியார்களும் ஒன்று சேர்ந்து பகிஷ்காரம் செய்யும் முகத்தான் தக்க பதிலிறுத்தனர். சுற்றுச் சார்பு மிகவும் அனுகூலமாகவிருந்த முதல் வட்டமேஜை மகாநாட்டிற்கு காந்திஜி போயிருந்திருப்பாரானால் 1935-வது வருடத்திய 'கவர்மெண்டு ஆப் இந்தியா ஆக்டு' என்னும் சீர்திருத்தச் சட்டம் இந்தியாவிற்கு கொஞ்சம் கூட அனுகூலமாக முடிந்திருக்கும். ஆனால் அவர் அதை முற்றிலும் பகிஷ்கரித்து விட்டு சுற்றுச் சார்பு அத்தனை அனுகூலமில்லாத இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டிற்குப் போனார். தவிர இந்தியா முழுதுக்கும்தான் மட்டுமே ஒரு தனிப் பிரதிநிதி என்று அவர் நினைத்துக் கொண்டது ஒரு தவறாகும். முதல் மகாநாட்டைப் போலவே இரண்டாவது மகாநாட்டிலும் வகுப்புப் பிரச்னை பலமாக எழுந்து ஒரு முடிவுக்கு வரமுடியாதபடி செய்து விட்டது.

இதற்கிடையில் பொருளாதார நிலைமை மிகவும் கேவலமாகி அரசாங்கத்தைத் திணரும்படி செய்தது. அவர்கள் வரிகளை கூட்டவே நாட்டில் மிகுந்த அதிருப்தி யேற்பட்டது. இந்த சந்தர்ப்பத்தை காங்கிரசார் தங்களுக்கு சாதகமாக வைத்துக் கொண்டு ஐக்கிய மாகாணத்தில் வரிகொடா இயக்கத்தைத் தொடங்கினார்கள். காந்திஜி இந்தியாவிற்கு வந்ததும் சட்டமறுப் பியக்கத்தை ஆரம்பித்தார். அரசாங்கத்தாரும் அடக்கு முறையை கையாளத் தொடங்கினர். அரசாங்கத்தின் நோக்கம் புலியாததோடு காங்கிரசிற்கு நாட்டில் அதிகமான செல்வாக்கு ஏற்பட்டது.

அரசாங்கத்தாரின் வெள்ளை அறிக்கை இந்தியர்களின் உயரிய இலக்ஷியத்திற்கு ஒரு பெரிய மறுப்பாகும். இந்த அறிக்கையை மொத்தமாக ஆராய்ந்து பார்த்தால் ஆரம்ப காலங்களில் கனவுகூட காணமுடியாதபடியிருந்த சுயராஜ்ய பாதைக்கு அதநம்மை இட்டுச் செல்லக்கூடியதாயிருக்கிறது. இந்தியாவின் துரதிர்ஷ்டவசமாக வகுப்புத் துவேஷம் மலிந்திருப்பதால் நாட்டிற் கிழைக்கப்படும் தீங்குகளை ஒரே முகமாக கண்டனம் செய்வதற்கு முடியாமலிருக்கிறது. எதிர்கால இந்திய சமஷ்டி அரசாங்கத்தில் சமஸ்தான மன்னர்களுக்கும் பிரட்டிஷ் இந்திய வியவகாரங்களில் கேள்விமுறையுண்டு; ஆனால் இந்திய சட்டசபை பிரதிநிதிகளுக்கு சமஸ்தான விஷயங்களில் தலையிட யாதொரு விதமான உரிமையும் கிடையாது.

பொதுஜன அபிப்பிராயமே சட்டத்தின் முக்கிய ஆதாரமென்னும் சரித்திர பாடத்தை இந்தியாவிலுள்ள அதிகாரி வர்க்கம் கொஞ்சமேனும் கற்றுக் கொண்டதில்லை. பயங்கர இயக்கம் பெரும்பாலும் 'உயிர் வாழ்வதற்குரிய போராட்டம்' என்னும் பொருளாதார தத்துவத்தையே அடிஸ்தானமாகக் கொண்டிருக்கிறது. படித்த இளைஞர்கள் பலர் வேலையில்லாத் திண்டாட்டத்தினால் வாடிக் கொண்டிருப்பது இந்த இயக்கத்திற்குரிய முக்கிய காரணங்களி லொன்றாகும். மானமாகவும் சாந்தமாகவும் வாழ்க்கை நடத்தக் கூடிய சந்தர்ப்பம் கிடைக்கும் பக்ஷத்தில் அந்த இயக்கத்தைச் சேர்ந்த பல இளைஞர்கள் அவ்வியக்கத்தை விட்டுவிடக் கூடுமென்பதில் சற்றேனும் ஐயமில்லை. காந்திஜியின் கிராமபுனருத்தாரண இயக்கம் அரசாங்கத்தாரை அந்த வழியில் வேலை செய்யும்படி ஊக்கமூட்டியிருக்கிறது.

எதிர்காலத்தில் எத்தனை நலம் விளைவிப்பதாயிருந்தாலும் காந்திஜியின் கொள்கை தற்போது நாட்டிற்கு மிகுந்த தோஷத்தை உண்டு பண்ணியிருக்கிறது. மர்மம் தெய்வ சங்கற்பம் இவைகளிலூன்று கொண்டிருக்கும் ஒருவருக்கு அரசியல் தகுந்த இடமேயல்ல. தற்கால நிலைமையை கவனிக்கும் பொழுது சட்டத்திற்குட் பட்ட

கிளர்ச்சியைத் தவிர இந்தியாவிற்கு வேறு வழியில்லை. மிதவாதிகள் சட்டத்திற்குட் பட்ட கிளர்ச்சியினுல் என்ன சாதித்து விட்டார்களென்று காங்கிரஸ் காரர்கள் கேட்பார்களானுல் சட்டமறுப்பினுலும் அகிம்சா தர்மத்தினுலும் ஒத்துழையாமையினுலும் அவர்கள் என்ன சாதித்து விட்டார்களென்று என்னுல் கேட்க முடியும். காங்கிரஸ் கொள்கையால் சுயராஜ்ய ஸித்திக்குப் பதிலாக நாடு பின்னேக்க மடைந்து சட்டசபைப் பிரவேசப் பேற்றை அடைந்திருக்கிறது. ஒரு வருடத்தில் சுயராஜ்யம் வாங்கித் தருகிறேனென்று கூறுவது மர்ம மனிதர்களாலும் சித்தர்களாலும்தான் முடியும். அரசியலில் காந்திஜி செய்த தப்பிதங்களால் மிகுந்த தீங்கு விளைந்திருக்கிறது. ஆனுல் குறிப்பிடத் தகுந்த ஒரு நல்ல விஷயமென்ன வென்றுல் பாமர மக்களிடையே உண்டாயிருக்கும் அற்புத எழுச்சியும் துணிவும் சகிப்புத் தன்மையுமாகும். காந்திஜி ஒருவரில்லையேல் இந்த நிகழ்ச்சியேற் படுவதற்கு எத்துணையோ காலம் வேண்டியிருக்கும்.

அரசியல் என்பது அநித்தியமானது; ஆனுல் ஒழுக்கம் எப்பொழுதும் நிலைத்து நிற்பது. அரசியல் விஷயங்களெல்லாம் மறந்து போகும் பொழுது மோகன்தாஸ் கரம்சந்த் காந்தியின் ஒழுக்கம் இந்தியாவின் இருதயத்தில் நிலைத்து நிற்கும்; இந்திய சரித்திரத்தில் அவரது திருநாமமும் ஊழியமும் சுடர்விட்டெரியும் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட்டிருக்கும்.

'இதுவரையிலும் அரசியல் வாதிகள் என்ன வெற்றியை யடைந்து விட்டார்கள்'? அவர்கள் ஆரம்பித்ததைவிட இப்பொழுதும் லட்சிய ஸ்தலத்துக்கு அண்மையில் வந்திருக்கின்றுர்களா? பொதுஜன வாழ்க்கையை நிர்மாணம் செய்வதில் அவர்கள் எத்துணை முன்னேற்றம் அடைந்திருக்கிறுர்கள்? பொருளாதார நிலைமை முன்னேற்ற மடைந்திருக்கிறதா அல்லது சீர்கேடுற்றிருக்கிறதா? அரசாங்கம் அதிகப்படியான பிரதிநிதித்துவ மடைவதற்கு என்ன வேலை செய்திருக்கிறது? கல்வி சரியாக வரையறுக்கப்பட்டு சமூக சீர்திருத்தம் சரியாக நடைபெற்று வருகிறதா? இந்த வகைகளில் சென்ற எழுபத்தி ஐந்து வருடங்களாக மிக சொற்பமான பலன் தான் ஏற்பட்டிருக்கிறதென் றுணரும்பொழுது நிராசையும் இனி செய்யவேண்டிய வேலையின் மிகுதியை நோக்கும்பொழுது அதைரியமு மேற்படக்கூடும். இன்று பொதுஜன ஊழியர்கள் முன்னிருக்கும் கஷ்டத்திற்கும் ஆரம்ப காலத்தில் தேசாபிமானிகளடைந்த கஷ்டத்திற்கும் ஒப்புவமையே கிடையாது. அவர்கள் அஸ்திவாரக் கல் நாட்டிய அரசியல் ஸ்தாபனங்களில் இந்திய தேசிய காங்கிரஸ் மிகப்பெரிய ஸ்தாபனமாகும். பொதுஜனங்கள் முன் நடந்தவைகளை அகட்டை செய்து தற்போது நடப்பவைகளுக்கு மிகவும் அதிகமான உயர்வு கொடுக்கக்கூடும். தற்போதுள்ளவை முன்னிருந்தவைகளின் வளர்ச்சி யென்பதையும் அத்தகைய வளர்ச்சிக்கு மூல காரணஸ்தர்களாயிருந்தவர்கள் தாதாபாய் நவரோஜியும் ஹியூமும் ஆவார்களென்பதையும் ஒருவராலும் மறுக்க முடியாது.

பொதுஜன ஊழியர்களுக்கு சரித்திர உணர்ச்சியிருக்க வேண்டுவது மிக மிக அவசியமாகும். இறந்த காலத்தில் விளைவே எதிர்கால முன்னேற்றத்திற்கு அடிப்படை யென்பதை அவர்கள் உணரவேண்டும். தற்போது காங்கிரசிலுள்ள தீவிர வாதிகளான ஒரு பகுதியினருக்கு காங்கிரஸ் கொள்கைகள் மீது அவநம்பிக்கை அதிகரித்து வருவதாகத் தெரிகிறது. இந்தியாவிலுள்ள அரசியல் நபோமண்டலத்தில் கரியமேகம் சிறிது காணப்படினும் சிறிதளவாவது முன்னேற்ற மடைந்திருப்பதை ஒப்புக்கொள்ளாதிருக்க முடியாது. இந்தியா ஒருபொழுதும் வீழ்ச்சியுருது, அதன் எதிர்காலம் வெற்றி நிரம்பியதாகவே யிருக்கும் என்ற நம்பிக்கையோடு இந்தியாவிலுள்ள சகல ஆண்களும் பெண்களும் தாய்நாட்டிற்குரிய ஊழியத்திலிறங்க வேண்டும். அவர்கள் பொதுஜனங்களின் போற்றுதலுக்கோ அல்லது எதிரிகளின் தூற்றுதலுக்கோ சற்றேனும் செவிசாய்க்காது விஷயங்களை உள்ளபடியே உணர்ந்து துணிவோடு தொண்டு புரிய முன்வரவேண்டும். புத்திசாலித்தனம், தன்னல மின்மை, மயக்கம் ஆசாபாசம் இவைகள் வருகிற பொழுது அவைகளை அடக்குவதற்குரிய ஆற்றல், கல்வி, ராஜதந்திரம், பிறப்பினுலோ இனத்தினுலோ ஏற்படும் வேற்றுமையை அறவே யொழிப்பதற்குரிய ஆற்றல், தெய்வ சக்தியின் மீது ஸ்திரமான நம்பிக்கை இவைகளே தேசத்தை நடாத்தும் தலைவர்களுக்கு எப்பொழும் வேண்டியவை.

---





# பிரபஞ்ச விலாசம்

(பானு ஆவன்னு)

### நிறத் திமிருக்கு நல்ல படிப்பினை

தற்போது இந்தியாவுக்கு வந்திருக்கும் ஆஸ்திரேலியா கிரிக்கட்டு டீமிலிருந்து இந்தியாவில் வதியும் வெள்ளையர்கள் படிக்கவேண்டிய ஓர் அரிய படிப்பினை இருக்கிறது. வெண்மை நிறத்தில் ஆஸ்திரேலியர்கள் மற்ற வெள்ளையர்களுக்கு சற்றும் குறைந்தவர்களல்ல. ஆஸ்திரிலேயரின் டீம் (விளையாடுபவர் சங்கம்) காரச்சிக்கு வந்த பொழுது காரச்சியிலுள்ள இரண்டு கிளப்புகள் (சங்கங்கள்) அவர்களை தங்களுடைய கிளப்பின் கௌரவ அங்கத்தினர்காளாயிருக்குமாறு வேண்டிக் கொண்டன. தங்களுடைய கிளப்பிற்கு உயர்வு தேடிக் கொள்வதற்கே அவர்கள் இங்ஙனம் செய்தார்கள். இந்த கிளப்புகளில் பிரவேசிப்பதற்குக்கூட இந்தியர்கள் அனுமதிக்கப் படுவதில்லை. இதை அறிந்த ஆஸ்திரேலியர்கள் இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கும் ஒரே மாதிரியான உரிமையளிக்கும் மற்றொரு கிளப்பில் சேர்ந்து தங்களுடைய ஜாகையை அங்கு வைத்துக் கொண்டார்கள். அவர்களது இந்த உசிதமான செயலுக்கு அவர்களை போற்றுதிருக்க முடியாது. இந்தியர்களோடு விளையாட்டில் பங்கு கொள்ளலாமெனில் ஏன் அவர்களோடு சேர்ந்து உறைதலாகாது? இவர்களின் உசிதமான செய்கையைக் கண்ட பிறகேனும் இங்குள்ள வெள்ளையர்கள் நல்லறிவு பெறுவார்களா?

### அடக்குமுறை பயனளித்ததா?

இதுகாறும் செய்யப்பட்டிருக்கும் அளப்பரிய அடக்கு முறைகளால் ஜெர்மனியிலுள்ள யூதர்களையும் பொதுவுடமைக்காரர்களையும் நாஜி 'ஆர்யர்' கட்கு ஒழிக்க முடியவில்லையென்று அனுமானிக்கவேண்டி யிருக்கிறது. பெர்லின் போலீஸ் தலைமை யதிகாரியான ஹெர் ஹெல்டோர்ப் ஓர் அறிக்கையில் இன்றும் ஜர்மனியில் ஒரு லக்ஷம் பொதுவுடமைக்காரர்கள் இருப்பதாகவும் அவர்களில் ஐம்பதினுயிரம் பேர்கள் மிகவும் ஊக்கமுடையவர்களாக விருப்பதாகவும் கூறுகிறுர். அவர்களை அழிப்பதற்கு 'காண்ஸன்ட்ரேஷன் காம்புகள்' போன்ற எத்துணையோ ஸ்தாபனங்கள் ஏற்படுத்தி மிகத் தீவிரமாக வேலை செய்தும் கொடிய அடக்கு முறையை கையாண்டும் பொதுவுடமைக்காரர்களை அடக்குவதற்கு நாஜி கவர்மெண்டாரால் முடியவில்லை யென்பது தெள்ளிதில் புலனுகின்றது. இது நமக்கு அத்துணை வியப்பளிக்கவில்லை. ஏனெனில் ஆதர்சங்களையும் இலக்ஷியங்களையும் அழிக்க எத்துணை கொடிய அடக்கு முறையாலும் ஆகாதன்றே? அரசாங்கத்தை எதிர்ப்பதற்கு இன்னும் ஜர்மனியில் பொதுவுடமைக்காரர்க ளிருப்பார்களானுல் அவர்களாலும் அவர்களைப் போன்று இன்னல்களனுபவிக்கும் யூதர்களாலும் ஒரு காலத்தில் நாஜி ஆட்சியை ஒழிக்க முடியாதென்று கூறுவதற்கில்லை. ஆனுல் அது எப்பொழுது நடைபெறுமென்பதை மட்டும் நம்மால் துணிந்து கூற முடியாது.

### இராணுவக் கல்வி

இந்தியர்களுக்கு இராணுவ பயிற்சியளிப்பதற்குரிய ஓர் கல்லூரியை நிறுவுவதற்கு டாக்டர் மூஞ்சே வெகு காலமாக முயற்சித்து வருகின்றுரல்லவா? இந்த கல்லூரியை நாஸிக்கில் ஸ்தாபிப்பதற்கு மாஜி இந்திய சேனுதிபதி ஸர். பிலிப் செத்வோட் நல்லாசியளித்ததோடு நூறு ரூபாய் நன்கொடையு மனுப்பினுர். அதோடு நாட்டில் பலவிடங்களில் இதுபோன்ற ஸ்தாபனங்கள் நிறுவ வேண்டியது மிகவும் அவசியமென்று அபிப்பிராயப்படவும் செய்தார். நாட்டிலுள்ள மக்களுக்கு இராணுவ பயிற்சியளிக்கும் முயற்சியை சேனுபதி போற்றியது ஓர் நல்ல அறிகுறியென்று நான் கருதுகின்றேன். உலகில் க்ஷேமமும் சமாதானமும் நிலவ வேண்டும் என்று ஆசைப்படுவதில் ஒருவனுக்கும் நான் குறைந்தவனல்ல. ஆனுல் நாட்டின் பாதுகாப்பிற்கு கொஞ்சம் சேனை இன்றியமையாதது என்பதை ஒருவராலும் மறுக்கமுடியாது. உலக சமாதானத்தை நிலைநிறுத்துவதற்கு ஒரு சர்வதேச பாதுகாப்பு சேனை வேண்டுமென்று கருதினுலும் நமக்கு ஒரு சிறு சேனையின் அவசியம் எப்பொழுது முண்டென்பதை அறிய முடியும். டாக்டர் மூஞ்சே அவர்களின் இந்த முயற்சி நன்குக வெற்றியடைய வேண்டுகின்றேன்.

### மூதியவரும் சீர்திருத்தமும்

மாஜி ஹைக்கோர்ட்டு நீதிபதி ஸர். ராமேசம் அவர்கள் தலைமையில் சென்னையில் நடந்த ஒரு கூட்டத்தில் திரு. டி. ஆர். வெங்கடராம சாஸ்திரி செய்த ஒரு சொற்பொழிவில் சமூக சீர்திருத்த சம்பந்தமாக சட்டங்களியற்றுவதற்குரிய அவசியமேற்படும் பொழுது அதைப்பற்றி ஆலோசித்து அபிப்பிராயம் கூறுவதற்கு பெரிய மாஜி உத்தியோகஸ்தர்களடங்கிய ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டுவது அவசியமென அபிப்பிராயப் பட்டிருக்கின்றுர். இது மிகவும் வன்மையாக எதிர்க்க வேண்டிய ஓர் அபிப்பிராயமாகும். மாஜி உத்தியோகஸ்தர்களுக்கும் சமூகத்தில் உயர்ந்த நிலைமையிலிருக்கும் புல தலைவர்கட்கும் கொடிய ஆசாரங்கள் காரணமாக சொல்லொணுத் துன்பத்திலுழலும் ஏழை மக்களைப்பற்றி கொஞ்சமேனும் அறிந்து கொள்வதற்கிடமில்லை. சாஸ்திரியார் கூறுவதுபோன்று ஒரு கமிட்டி நியமிக்கப்படுமானுல் அன்றே சமுதாய சீர்திருத்த முன்னேற்றத்திற்கு மங்களம் பாடவேண்டியதுதான். ஆதலின் சீர்திருத்த வேட்கைகொண்ட இளைஞர்கள் முதியவர்களின் இத்தகைய பிற்போக்கான அபிப்பிராயத்தைக் கண்டிக்க வேண்டுவது அவசியத்திலும் அவசியமென்பதை நான் ஈண்டு வலியுறுத்துகின்றேன்.

### வீண் சிரமம்

சென்னை காங்கிரஸ் வாதிகளில் ஒரு சிலர் திரு. எஸ். சீனிவாச ஐயங்கார் அவர்கள் மறுபடியும் அரசியலில் புகுவதற்கு பகீரதப் பிரயத்தினம் செய்து வருகின்றுர்களெனத் தெரிகிறது. அரசியலிலிருந்து ஒதுங்கி இனி பொது வாழ்வில் ஈடுபடுவதில்லையென்ற பிடிவாதமா யிருக்கும் ஒருவரை ஏனோ

இத்துணை நிர்ப்பந்தம் செய்யவேண்டும்? ஒருக்கால் இவர்களது முயற்சி வெற்றிபெற்று அவர் தமிழ் நாட்டின் தலைமை யேற்க ஒப்புக்கொண்டாலும் அதனால் விசேட நன்மை யொன்று மேற்படப் போவதில்லை. இதனால் பல துன்பங்கள் விளைந்தாலும் விளையலாம். திரு. ஐயங்கார் அவர்களின் அறிவாற்றல்களைப் பற்றியோ அவர்களது வல்லன்மையைப் பற்றியோ ஒருவராலும் மறுக்க முடியாது. ஒரு தலைவருக்கு இருக்க வேண்டிய அடக்கம், பொறுமை, தொண்டர்களை அன்போடு நடத்தும் அருங்குணம் இவைகளை திரு. ஐயங்கார் அவர்களிடம் அணுத்துணையும் காணமுடியாது. அவர் கூறுவதற் கெல்லாம் ஒத்துப் பாடுபவர்கட்கு கற்பக விருட்சமாகவும் அவரது அபிப்பிராயத்தை மறுக்கத் துணிபவர்கட்கு காலாக்கினி ருத்திராகவும் அவர் விளங்குவார். கோபம் கனன்றெழும் பொழுதெல்லாம் அவர் நிதான புத்தியை யிழந்து ஏனைய கண்ணியம் மிக்க தலைவர்களை யெல்லாம் வரைதுறையின்றி இழித்துப் பேசுவது வழக்கம். பண்டித மோதிலால் நேருவிடம் அவர் நடந்து கொண்ட மாதிரியையும் இந்திய இளைஞருலகத்தின் உள்ளத்தின் கோயில் கொண்டிருக்கும் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களை அவர் பலதடவை நிந்தித்துப் பேசியதையும் உணர்ச்சி அணுவளவேனும் உள்ள இந்தியர்களால் ஒரு பொழுதும் மறக்க முடியாது. ஆகவே இவ்வகையி லீடுபட்டிருக்கும் அன்பர்கள் தங்கள் செய்யப்போகும் காரியத்தைக் குறித்து ஒரு முறைக்குப் பன்முறை ஆலோசித்துப் பார்ப்பார்களாக.

### முதலைக் கண்ணீர்

இலகர் சுயராஜ்ய நிதியைப்பற்றி "ஜஸ்டிஸ்", "விடுதலை", "குடியரசு" போன்ற அல்லும் பகலும் அனவரதமும் காங்கிரசை கண்டிப்பதே கடமையெனக் கொண்டிருக்கும் பத்திரிகைகள் கவலையெடுத்துக் கொண்டிருப்பதைக் காணும்பொழுது எனக்கு அடங்கா நகைப்பேற்படுகின்றது. ராஜாஜியின் ஆணித்தரமான பதிலைக் கண்ட பிறகேனும் இவைகளடங்குமெனப் பார்த்ததற்கு முற்றிலும் முரணாக இன்னும் அந்தத் துரதிர்ஷ்டம் வாய்ந்த விவாதத்தை யொழித்ததாகக் காணவில்லை. இலகர் சுயராஜ்ய நிதியென்பது திலகர் ஞாபகார்த்த கமிட்டியாரால் ஏற்படுத்தப்பட்ட ஒரு நிதியல்ல வென்பதையும் காங்கிரஸ்காரர்களால் லோகமான்யரின் புனித நாமத்தில் தொடங்கப்பட்ட ஓர் காங்கிரஸ் நிதி ஆகுமென்பதையும் இவர்கள் ஏனோ மறந்தல்வேண்டும்! தங்களுடைய விவாதத்திற்கு ஆக்கம் தேடும் முகத்தானுவது "விடுதலை" பத்திரிகை திலகர் பெருமானை ஏனைய தேசிய வாதிகளைப் போன்று "லோகமான்யர்" என்றழைத்த முன் வந்ததை மனமாரப் பாராட்டுகின்றேன்.

### நவாப் தர்பார்

இந்திய நாட்டின் முடிசூடா மன்னர் இந்திய தேசிய காங்கிரசின் இணையற்ற தலைவர், அனைத்தையுந் துறந்த அரும்பெரும் தியாகி எளியவர்க்குழைக்கும் ஏழை பங்காளன் பாபு ராஜேந்திர பிரசாத் அவர்கள் கேரள நாட்டு விஜயத்தின் பொழுது திருவாங்கூர் சமஸ்தானத்தினுள் பிரவேசிக்க லாகாதென தடையுத்தரவு பிறப்பிக்கப் பட்டிருக்கிறதென "இந்தியன் எக்ஸ்பிரஸ்" பத்திரிகை கூறுகின்றது. இது உண்மையாக விருக்குமானல் திருவாங்கூர் அரசாங்கத்தின் இந்தச் செயலை பொது மக்கள் உரமாக கண்டியாதிருக்க மாட்டார்கள். பாபு ராஜேந்திர பிரஸாத் இந்தியா வெங்கணும் விஜயம் செய்துகொண்டு வருகிறார். இது வரையிலும் எங்காவது அவர்கட்கு எவ்விதமான தடையுத்தரவும் போட்டதாகத் தெரியவில்லை. அதோடு ஒரு சில சுதேச சமஸ்தானங்களில் சமஸ்தான விருந்தினராக வரவேற்கப்பட்டிருக்கிறார் என்றும் அறிகின்றேன். அங்ஙனமிருக்க கல்வி வளர்ச்சியிலும் பெண்கள் முன்னேற்றத்திலும் இன்னும் பல்வேறு துறைகளிலும் இந்தியாவிலுள்ள சுதேச சமஸ்தானங்களின் முன்னணியில் முதன்மையாக நிற்கின்ற திருவிதாங்கூர் சமஸ்தானத்திலிருந்து இத்தகைய ஓர் உத்தரவு புறப்பட்டிருக்கிற தென்பதைக் காண திருவிதாங்கூர் மீது பற்றும் மதிப்பும் வைத்திருப்பவர்களால் மிகுந்த வருத்தமடையாதிருக்க முடியாது. இந்திய அரசாங்கத்தில் பொறுப்பு வாய்ந்த பல உயரிய உத்தியோகங்கள் வகித்து வரும் நடுநிலைமை தவறாத் ஓர் உத்தம ராஜதந்திரி யென்று பலரால் கருதப்படுபவருமான நவாப் ஸர் முகமத் ஹபிபுல்லா அவர்கள் திவானாக விருக்கையில் இத்தகைய ஓர் சம்பவம் நேர்ந்திருப்பது எவ்வாற்றாலும் வருந்துவதற்குரியதாகும். சட்டமறுப் பியக்கம் நிறுத்தப்பட்டு இந்தியா முழுதும் அமைதி நிலவியதும் இந்தியா அரசாங்கமே இந்திய தேசிய காங்கிரஸ் ஓர் சட்ட விரோதமான ஸ்தாபனம் என்றிருந்த தடையை விலக்கி விட்டது. ஆனல் அந்தத்தடை திருவாங்கூர் சமஸ்தானத்தில் மட்டும் இன்னும் இருந்து வருகிறதென்பது பலருக்கும் பெரும் வியப்பை உண்டாக்கக் கூடும். இது ஸர் முகமதின் முதற் தப்பிதமாகும். இதற்கு சிகரம் வைத்தது போலிருக்கிறது ஸர். முகமதின் கவர்மெண்டு செய்திருக்கும் தற்போதைய செய்கை. இத்தகைய செயல்களால் காங்கிரசின் செல்வாக் கிற்கோ இராஜேந்திரரின் புகழுக்கோ தினைத்துணையும் குறைவு ஏற்படாததோடு திருவாங்கூர் மாட்டு இந்திய மகா ஜனங்களுக்கிருக்கும் நன் மதிப்பிற்கு உலைவைத்ததாகவும் முடியுமென்பதை திருவாங்கூர் அதிகாரிகள் கவனிப்பார்களா. ஸர். முகமதிற்கு பெயரளவில் 'நவாப்' பட்டம் கிடைத்ததும் நவாப் தர்பார் தொடங்கி விட்டார் போலிருக்கிறது.

---





# ஸ்ரீநிவாச ஐயங்கார் காங்கிரஸ் பிரவேசம்

## விருந்தில் மனம்விட்ட பேச்சு

மாஜி காங்கிரஸ் தலைவரான ஸ்ரீ. எஸ். சீனிவாச ஐயங்கார் திரும்பவும் காங்கிரசில் சேரப் போகிறாரென்று கொஞ்சகாலமாக எங்கும் இருந்துவந்த பிரஸ்தாபம் டிசம்பர் 9ந் தேதி உறுதியாயிற்று. திரு. கே. பாஷியம் அய்யங்காரின் வீட்டில் திரு. சீனிவாச அய்யங்காருக்கு ஒரு விருந்து நடந்தது. அதில் திரு. சீனிவாச ஐயங்கார், தேசம் விருப்பினால் தாம் திரும்பவும் காங்கிரஸிற்கு வரத் தயாராயிருப்பதாகக் கூறினர். அவ்விருந்திற்கு திருவாளர்களான சி. என். முத்துரங்க முதலியார், சாமி. வெங்கடாசலம் செட்டியார், வி. ராமதாஸ் பந்துலு, டாக்டர் யூ. ராமாராவ், கத்தே ரங்கைய நாயுடு, ஜனுப் அப்துல் ஹமீத்கான், ஜனுப் ஜமால் முகமது, சி. ஆர். சீனிவாசன், எம். பக்தவத்சலம், பெருமாள்சாமி ரெட்டியார், பி. ஜகன்னுததாஸ், லால்தாஸ் கோவிந்ததாஸ், ஜி. செல்வபதி செட்டியார், டி. வி. கல்யாணசுந்தர முதலியார் முதலிய பலர் வந்திருந்தார்கள். சுமார் நான்கு மணி நேரம் வரையில் பலரும் மனம்விட்டு பல விஷயங்களையும் விவாதித்தார்கள். பல சந்தேகங்களையும் நிவர்த்தி செய்தார்கள். அதில் முக்கியமானது, இப்பொழுது இம்மாகாண காங்கிரஸ் பதவியிலிருப்பவர்களை விரட்டி விடுவதற்காக திரு. ஸ்ரீனிவாசய்யங்கார் காங்கிரஸ் பதவிக்கு வருகிறார் என்று கருதுவது தவறு என்றும், காங்கிரஸ் நோக்கத்தை இன்னும் அதிக தீவிரமாக நிறைவேற்றி வைப்பதற்கான காரியங்களைச் செய்வதற்காகவே அவர் வருகிறார் என்றும் கூறப்பட்டதாகும். திரு. ஐயங்கார் நீண்ட காலம் ராஜீய விஷயங்களிலிருந்து விலகியிருந்து விட்டதால், நிலைமையைப் பரிசீலனை செய்யத் தமக்கு அவகாசம் வேண்டுமென்று கூறினார் என்று தெரிகிறது. இதற்கு மத்தியில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் அவர் ஸ்தானம் பெறும்படிச் செய்வதற்கான முயற்சிகள் நடந்து வருகின்றன. விருந்தில் திரு. சீனிவாச அய்யங்கார் பேசுகையில், பல விஷயங்களைப் பற்றியும் தமது கருத்து என்ன வென்பதை விளக்கிக் கூறினர். வந்திருந்தவர்கள், அவர் திரும்பவும் காங்கிரஸில் தீவிரமாக ஈடுபட வேண்டுமென்று ஏகோபித்துக் கூறினர். மாகாணம் முழுதும் இதே கருத்திருக்கிற தென்று அவருக்கு உறுதி கூறினர்கள்.

---

### சென்னை
### காங்கிரஸ் பிரதிநிதிகள் தேர்தல்.

லக்ஷ்மணபுரி காங்கிரசுக்கு சென்னை நகரத்திலிருந்து 5 பிரதிநிதிகள் தேர்ந்தெடுப்பதற்காக டிஸம்பர் 8-ந் தேதி காங்கிரஸ் மண்டபத்தில் தேர்தல் நடை பெற்றது. ஐந்து ஸ்தானங்களுக்கு 16 பேர்கள் அபேக்ஷகர்களாக நின்றபடியால் வோட் எடுக்க நேரிட்டது. சட்டசபைத் தேர்தல்களைப் போல காங்கிரஸ் தேர்தலிலும் வோட்டர்கள் வந்து வோட்டுக் கொடுத்தது சென்னையில் இதுவே முதற் தடவையாகும். மொத்தம் 4491 வோட்டர்களில் 923 பேர்கள் வோட்டுச் செய்தனர். திரு. எஸ். சத்தியமூர்த்தி, ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மீபதி, திரு. டி. ஜி. லக்ஷ்மணஸ்வாமி முதலியார், திரு. சங்கு சுப்ரமண்யம், திரு. தியாகராஜப் பிள்ளை ஆகிய ஐவர்களும் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

---

# முப்பத்தேழாவது
# தமிழ் மாகாண அரசியல் மகாநாடு

1936-ஞு ஜனவரி-மீ 4, 5 தேதிகளில் 37-வது தமிழ் மாகாண அரசியல் மகாநாடு காரைக்குடியில் நடைபெறுகிறது.

வரவேற்புக் கமிட்டி மிக்க ஊக்கத்துடன் வேலைகள் செய்து கொண்டிருக்கிறது. தமிழ் நாட்டிலிருந்தும், வெளி மாகாணங்களிலிருந்தும் பல தலைவர்கள் விஜயம் செய்கின்றார்கள்.

மேற்படி மகாநாட்டின் வேலை முறைகள் அவ்வப்பொழுது ஊழியனில் வெளியிடப்பெறும்.

அயல் நாட்டிலும், உள்நாட்டிலும் உள்ள நமது ஜில்லா அபிமானிகள் தங்கள் தங்களாலியன்ற பொருளுதவி செய்யும்படி கேட்டுக் கொள்ளப்படுகின்றார்கள்.

தொண்டர்களாய்ச் சேர விரும்புகின்றவர்கள் தங்கள் பெயர்களை 20–12–35-க்குள் கிடைக்கும்படி அனுப்பவேண்டும்.

எல்லாக் காங்கிரஸ் அபிமானிகளும் தங்களுடைய பூர்ண ஒத்துழைப்பையும் ஆதரவையும் தரும்படி கேட்டுக் கொள்ளுகின்றோம்.

மெ. ராம. மெ. மெய்யப்ப செட்டியார்,
வரவேற்புக் கமிட்டித் தலைவர்.

சா. கணேசன்,
பொதுக் காரியதரிசி.

## புதிய அரசியல் திட்டத்தின் அமுல்

### புதிய அரசப் பிரதிநிதியின் வரவு

புதிய அரசியல் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு வேண்டிய மன்னரது கட்டளையை கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு முன் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் பிரிட்டிஷ் மந்திரி சபையினர் ஆஜர் செய்யப் போவதில்லை யென்று டில்லியிலுள்ள அதிகாரிகள் நம்புகின்றனர்.

காமன்ஸ் சபை ஜனவரியில் திரும்பவும் கூடும்பொழுதுதான் இந்த கட்டளையை அவர்கள் ஆஜர் செய்வார்களென்று தெரிகிறது. ஆகவே சிந்து மாகாண பிரிவினை ஒரிசா மாகாண அமைப்பு முதலியவற்றின் தேதிகளையும், புதிய கவர்னர்கள் நியமனங்களையும் ஜனவரி மாத இறுதியில்தான் வெளியிடுவார்கள்.

### புது வைசிராய் வரவு

லார்டு வில்லிங்டனுக்குப் பின் வைசிராயாக நியமிக்கப்பட்டிருக்கும் லார்ட் லின்லித்கொ இந்தியா வந்து சேரும் தேதியைப்பற்றி உத்தியோக முறையில் எவ்வித அறிக்கையும் வெளிவரவில்லை. எனினும் அவர் வருகிற ஏப்ரல் மாதம் 17-ந் தேதி பம்பாய் வந்திறங்கி மறுநாள் டில்லியை அடைவாரென்று தெரிகிறது.

பெப்ரவரி மாதம் 3-ந் தேதி ஆரம்பமாகும் இந்திய சட்டசபைக் கூட்டம் புதிய வைசிராய் வந்து சிம்லா திரும்பிச் செல்லும் வரைக்கும் தொடர்ந்து நடைபெறுமென்று தெரிகிறது.

### சீர்திருத்த பூர்வாங்க வேலை

சீர்திருத்த காரியாலய கூட்டுக் காரியதரிசியான திரு. இ. கே. ரோட்ஸ் டிசம்பர் 2-ந் தேதி லாகூருக்குப் போயிருந்தார். புதிய சீர்திருத்தத்தை ஆரம்பிக்கும் முன் செய்யவேண்டிய பூர்வாங்க வேலை சம்பந்தமாக சில விஷயங்களை மாகாண சர்க்காரைக் கலந்து பேசுவதற்காகவே திரு. இ. கெ. ரொட்ஸ் லாகூர் போயிருந்ததாக தோன்றுகிறது. அவர் அங்கிருந்து வந்ததும் எல்லைப்புற சர்க்காரைக் கலந்து ஆலோசிப்பதற்காக டிசம்பர் 10-ந் தேதி பெஷாவாருக்கு புறப்பட்டுப் போனார்.



# செய்தித் திரட்டு.



அமெரிக்காவிலுள்ள பிரபல நூலாசிரியரான பீட்டர் ஆஸ்வால்டு லாம்ப் என்பவர் மரணமானார்.

* * *

சக்கிரவர்த்தியின் சகோதரியான விக்டோரியா இளவரசி மரணமடைந்தார்.

* * *

வருகிற ஜனவரி முதல் சென்னை ஜில்லாவை தனியாக பிரித்து அதற்கு ஒரு கலெக்டர் நியமிக்க சர்க்கார் தீர்மானித்திருக்கின்றனர். திரு. வி. என். குட்வா முதல் கலெக்டராக விருப்பார்.

* * *

ஜப்பான் நாட்டில் முதன் முதலாக கோப்நகரில் ஒரு மசூதி கட்டி முடித்திருக்கிறார்கள். அந்த மசூதி இந்திய முஸ்லிம் லீக் மாஜி தலைவரான ஜனாப் மியாம் அப்துல் அஜீஸ் அவர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்டது. இந்த ஆரம்ப வைபவத்திற்காகவே அவர் விசேஷமாக அங்கு அழைக்கப்பட்டிருந்தார்.

* * *

பிரிட்டிஷ் பிரதம மந்திரி திரு. ஸ்டான்லி பால்டுவினின் புதல்வரும் அபேத வாதியுமான திரு. ஆலிவர் பால்டுவின் சமீபத்தில் இந்தியாவுக்கு வந்து லண்டனில் ஒரு சினிமா படம் தயாரிப்பதற்காக ஒரு கதை எழுதப் போவதாக வந்த வதந்தியை யொட்டி ஒருவர் அவரை பேட்டிகண்டதில் இந்திய தேசிய காங்கிரஸ் பொன்விழாக் கூட்டத்திற்கு தான் அவசியம் செல்லப் போவதாகவும் புதிய சீர்திருத்தத்தின் கீழ் வரும் முதல் தேர்தலையும் ராஜப் பிரதிநிதிகள் மாறுவதையும் பார்க்கப் போவதாகவும், காந்திஜி, தாகூர், சுபாஷ் போஸ், ஸரோஜினி தேவி, முதலிய தலைவர்களை கட்டாயம் சந்திக்கப் போவதாகவும் அவர் கூறினார்.

* * *

திருவிதாங்கூர் ஹைகோர்ட் நீதிபதி திரு. ஏ. வெங்கிடராவ் டிஸம்பர் 5-ந் தேதி காலை சென்னை மாம்பலத்தில் மரணமடைந்ததாக ஒரு செய்தி கூறுகின்றது.

* * *

நாகபுரியில் சீக்கிரம் ஏற்படப் போகும் புதிய ஹைகோர்ட்டுக்கு சென்னை ஹைகோர்ட்டு நீதிபதி ஜஸ்டிஸ் ஜி. ஸ்டோனை பிரதம நீதிபதியாகவும் ஸ்ரீமான்கள் எப். எல். கிரில், பவானி சங்கர நியோகி, ஆர். இ. போலக், விவியன் போஸ் இவர்களை ஜட்ஜுகளாகவும் நியமித்துள்ளதாக சர்க்கார் அறிக்கை ஒன்று கூறுகிறது.

* * *

டிசம்பர் 2-ந் தேதியன்று நள்ளிரவில் சிவகாசி அக்கிரகாரத்தில் ஒரு ஐயங்கார் வீட்டில் அவ்வீட்டு மாது மேன்மாடியில் படுத்து நித்திரை செய்யும்பொழுது திருடர்கள் உள்ளே நுழைந்து அம்மாது கழுத்திலணிந்திருந்த ரூ. 200 பெறுமானமான நகையை அறுத்துக் கொண்டு ஓடிவிட்டனர். சிவகாசி போலீசார் விசாரணை செய்து வருகின்றனர்.

* * *

இந்திய நாட்டு சாமான்களைக் கொண்டு இந்தியாவில் முதலாவதாக ஒரு ஆகாயவிமானத்தைச் செய்த பெருமை ஆலப்புழையிலுள்ள ஒரு மாணவனைச் சாருகின்றது. மரத்தினாலும் அட்டைகளாலும் அமைக்கப்பட்ட அந்த விமானத்தை பரிக்ஷிக்கும் பொருட்டு 40 அடி உயரம் பறந்து சென்றார். அந்த விமானம் ஒரு மரத்தில் மோதுண்டதால் அந்த மாணவருக்கு சிறிது காயம் ஏற்பட்டது. இவ்வழியில் மீண்டும் முயற்சி செய்வதாக அவர் கூறுகிறார்.

* * *

லட்சுமணபுரிக் கருகிலுள்ள பாரேச் என்னுமிடத்தில் ஒரு பெட்ரோல் கடையில் தீ விபத்தேற்பட்டது. கடை முழுதும் எரிந்து போயிற்று. சுமார் பதினாயிரம் ரூபாய் நஷ்டமேற்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

* * *

திருச்சி முனிசிப்பல் லாரி சென்ற வெள்ளிக்கிழமை யன்று மாலை 13 வயதுள்ள ஒரு பெண்மீது ஏறிவிட்டது. அந்தப் பெண் அதே இடத்திலேயே மாண்டு போனாள். அந்த விபத்து பாலகரைக்கு அருகில் நடந்தது.

* * *

இந்திய சர்க்கார் இராணுவ இலாக்காவின் பெயரை "இந்திய சர்க்கார் பாதுகாப்பு இலாக்கா" வென்று 1936 ஜனவரி 1 ந் தேதி மாற்றிவிடுவார்களென்று சர்க்கார் அறிக்கை கூறுகிறது. இனி இராணுவ இலாக்காக் காரியதரிசிக்கு எழுதும் கடிதங்களை "இந்திய சர்க்கார் பாதுகாப்பு இலாக்காக்காரியதரிசி" என்று விலாசமிட வேண்டுமென்றும் மேற்படி அறிக்கையில் குறிப்பிடப் பட்டிருக்கிறது.

* * *

கானாடுகாத்தான் கோட்டையூர் ரஸ்தா மார்க்கங்களில் கொஞ்சகாலமாக வழிப்பறிக் கொள்ளைகள் நடந்து வந்தன. பள்ளத்தூர் ஸப் இன்ஸ்பெக்டர் எஸ். வி. மாணிக்கம் அவர்களின் தீவிர முயற்சியால் 13 பேர்கள் கைது செய்யப்பட்டு அவர்கள் மீது வழக்குத் தொடரப்பட்டதில் 9 பேருக்கு ஒவ்வொரு வருஷ கடுங்காவலும் 4 பேருக்கு ஆறுமாத கடுங்காவலும் தேவகோட்டை ஜாயிண்ட் மாஜிஸ்திரேட்டால் தண்டனை விதிக்கப்பட்டது. இப்பொழுது அந்த ரஸ்தாக்களில் இரவு காலங்களில் ஜனங்களும் வண்டிகளும் அச்சமின்றி போய் வருகிறார்கள்.

* * *

இந்திய சட்டசபையின் அடுத்த கூட்டம் புது டில்லியில் 1936 பெப்ரவரி மாதம் 3-ந் தேதி திங்கட்கிழமையன்று கூடுமென்று சர்க்கார் அறிக்கையொன்று கூறுகிறது.

* * *

இந்திய சட்டசபைத் தலைவர் சர் அப்துர் ரஹிம் 10-ந் தேதி காலை ஆக்ராவிலிருந்து கல்கத்தா வந்து சேர்ந்தார். ஜனவரி 15 அல்லது 20 தேதி வரையிலும் அவர் கல்கத்தாவில் தங்குவார்.

* * *

அலகாபாத் முனிசிபாலிடிக்கு காங்கிரஸ் கட்சியார் 13 அபேக்ஷகர்களை நிறுத்தியிருந்ததில் 9 பேர்கள் வெற்றியடைந் திருக்கிறார்கள். வெற்றி பெற்றவர்களில் பண்டித மோதிலால் நேருவின் புதல்வியான ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட் ஒருவராவர்.

* * *

புட்லண்ட் எஸ்டேட் கூலியான மதுரைமுத்து என்பவன் அந்த எஸ்டேட் ரைட்டரான ஜாம் என்பவரை கத்தியால் குத்திக் கொன்றான். சப் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் நடந்த விசாரணையில் எதிரி குற்றவாளி யென்பதை யொத்துக் கொண்டான். அவனை மாஜிஸ்திரேட் செஷன்ஸ் விசாரணைக்கு அனுப்பினார்.

* * *

டிசம்பர் 6-ந் தேதி ஸ்ரீரங்கம் முனிசிப்பல் சபைக் கூட்டத்தில் வருகிற 28-ந் தேதியன்று காங்கிரஸ் பொன்விழாவை கொண்டாடுவ தென்றும் அதற்காக வேண்டிய நிதியை சேகரிப்பதற்காக சேர்மன், திரு. வாசுதேவ ஐயங்கார், ஸ்ரீமதி கண்ணுவம்மாள் இவர்களடங்கிய ஒரு கமிட்டியை நியமிப்பதென்றும் தீர்மானித்திருக்கின்றனர்.

* * *

மைசூர் தங்கச் சுரங்கக் கலகம் சம்பந்தமாக வந்த இரண்டு வழக்குகளில் கோலார் தங்க சுரங்க விசேஷ அடிஷனல் மாஜிஸ்திரேட் திரு. ஜி. சுந்தரராவ் தீர்ப்புக் கூறினார். ஒரு வழக்கில் 3 பேரை தண்டித்து ஒருவரை விடுதலை செய்தார். மற்ற வழக்கில் 13 பேரை தண்டித்து 7 பேரை விடுதலை செய்தார்.

* * *

சென்ற செப்டம்பர் மாதம் திருநெல்வேலியை யடுத்த முத்தலாபுரத்தைச் சேர்ந்த எரு நாயக்கர் லைசென்ஸ் இல்லாத ரிவால்வர் ஒன்றை வைத்திருந்த குற்றத்திற்காக கோயில்பட்டி சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட்டினால் சென்றவாரம் 3 மாத கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்.

* * *

இந்த மாத கடைசி வாரத்தில் தென்னிந்திய ஹிந்தி பிரசாரகர்களின் மகாநாட்டை சென்னையில் கூட்டுவதாக ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கிறதென்றும், லாகூர் ஸம்ஸ்கிருத ஹிந்தி அறிஞர் ஸ்வாமி ஸத்யதேவ்ஜி பரிவ்ராஜா மகாநாட்டிற்கு தலைமை வகிக்க இசைந்துள்ளாரென்றும் தெரிகிறது.

* * *

கிறிஸ்துமஸ் புதிய வருடக் கொண்டாட்டங்களை முன்னிட்டு இந்திய சிறையிலிருந்து வரும் எல்லா அரசியல் கைதிகளையும் விடுதலை செய்யும்படி இராஜப் பிரதிநிதிக்கு சிபார்சு செய்யப்படுமா வென்று திரு. லான்ஸ்பெரி பார்லிமெண்டில் கேட்ட கேள்விக்கு இந்த பிரச்னையை வைசிராயின் இஷ்டப்படிக்கு இந்தியா மந்திரி விட்டிருப்பதாகவும் தெரிந்த வரையில் அரசியல் கைதிகளை விடுதலை செய்வதாக வைசிராய் உத்தேசிக்கவில்லை யென்றும், செப்டம்பர் மாதத்தில் 21 சட்ட மறுப்புக் கைதிகள்தான் தண்டனை அனுபவித்து வருவதாகவும் பதிலளிக்கப்பட்டது.

* * *

காங்கிரஸ் பொன் விழா வைபவத்தின் போது இந்தியாவின் தலைநகரில் ஒரு சுயராஜ்யமாளிகை கட்டவேண்டுமென்ற யோசனை காங்கிரஸ்காரர்களால் துரிதமாக கவனிக்கப்பட்டு வருகிறது. இம்மாளிகை கட்டுவதற்காக டில்லி காங்கிரஸ் காரர்கள் ரூ 15000 நிதி வசூல் செய்ய நிச்சயித்திருக்கிறார்கள்.

* * *

24 மணி நேரத்திற்குள்ளாக டில்லியை விட்டு வெளியேறி விட வேண்டுமென்றும் ஸ்தல சர்க்கார் அனுமதியின்றி மீண்டும் டில்லிக்குள் காலெடுத்து வைக்கக் கூடாதென்றும் பம்பாயைச் சேர்ந்த தொழிலாளர் தலைவர் திரு. யூசப் லால்ஜி ஆமத் மீது டில்லி பிரதம கமிஷனர் ஒரு நோட்டீஸ் அனுப்பியிருக்கிறார்.

* * *

அகில இந்தியா ஆதி இந்து சேவகா சங்கத்தின் தென் மாகாணங்களுக்குரிய இன்ஸ்பெக்டர் ஸ்ரீ பெண்டாரி சென்றவாரம் திருநெல்வேலிக்கு விஜயம் செய்து ஜில்லா சங்கத்தலைவர் திரு. சாவடி கூத்த நயினார் பிள்ளையவர்களுடைய விருந்தினராக தங்கியிருந்து முனிசிப்பல் தோட்டிகளையும் மற்றும் ஆதி இந்துக்கள் குடியிருக்குமிடங்களையும் பார்வையிட்டார்.

* * *

பாலையம்பட்டி நாடார்குல பிரமுகரும் சிறந்த சீர்திருத்தக்காரரும் கல்வியபிமானியுமான திரு. சு. ப. சுப்பிரமணிய நாடாரின் குமாரர் திரு. என் கணேசன். பி. ஏ. (ஹானர்ஸ்) டிசம்பர் 14-ந் தேதி பம்பாய் துறைமுகத்திலிருந்து ஐ. ஸி. எஸ். பரிக்ஷைக்கு படிப்பதற்காக "கார்பூ" என்ற கப்பலில் இங்கிலாந்து செல்கின்றார்.

* * *

(6-ம் பக்கம் தொடர்ச்சி)

மற்ற இருவரும் பாடவேயில்லை. இவர்கட்கு நல்ல சங்கீத ஞானமுண்டு. ஆயினும் பாடாமலிருப்பது டயரக்டருடைய போதனை யென்று நினைக்கிறேன். சினிமாவிற்கு பாட்டு ஓர் முக்கிய அங்கமல்ல வென்பதை டயரக்டர் சாண்டோ முதன் முறையாகத் தமிழ் டாக்கியுள் மேனகா மூலம் காண்பித்துவிட்டார். பிரஸ்தாப நடிகர்கள் இருவரும் பாடாததால் கதைக்கு எந்தவிதமான குறைபாடும் ஏற்பட்டுவிடவில்லை. வேண்டுமானால் தன் காதலி மூர்ச்சித்துக் கிடைக்கையில் காதலன் தலைமாட்டிலிருந்து ராகம் தாளம் தவறாது அரைமணி நேரம் சிட்டா ஸ்வரங்களுடன் தியாகராஜ கிர்த்தனை பாடிவிட்டு பிறகு முகத்தில் தண்ணீர் தளிக்கும் ஆபாசமே யொழிந்திருக்கிறது என்னலாம். * *

நைனாமுகம்மது ஒன்றிரண்டு பாடல்களைப் பாடுகிறார். அவை கேட்கத் தகுந்தவைகளே. அவற்றுள் தோட்டத்திலிருந்து பாடும் ஒரு பாட்டு நெஞ்சையள்ளும்.

டயரக்டர் சாண்டோ

இந்தப் படத்தில் இருக்கும் கலா ரசத்திற்கு நடிகர்கள் ஒரு அளவுக்கு பாத்திரகள்தான்; என்றாலும் டைரக்டரின் திறமையையே பெரிதும்சொல்ல வேண்டும். மேனகா முழு வெற்றியானதற்கு முக்கியகாரணம் தமிழ் நாட்டு வழக்க ஒழுக்கங்களைத் தெரிந்த ஒரு வடநாட்டு நடிகர் டைரக்ட் செய்ததுதான். திரு. சாண்டோ புதுக்கோட்டை வாசி. நெடுநாளாக வடநாட்டில் சினிமாத் தொழிலிலீடுபட்டு பல படங்களில் நடித்துப் பெயரெடுத்திருக்கிறார்.

எப்படியும் படம் மிகவும் வெற்றிகரம். நான் நடிகர்கட்கும், டயரக்டர்கட்கும் நன்மை விளைய ஆசைப்படுகிறேன். T. K. சகோதரர்களை ஊக்கப்படுத்த வேண்டுவது தமிழ் நாட்டார் கடமை.

கடைசியாக படத்தின் ஒலிப்பதிவு, படப்பதிவு (Photography) முதலியன மிக நன்றாயிருப்பதையும், கதைக்கு வேண்டிய இடங்களை தத்ரூபமாக எடுத்துக் காண்பிப்பதையும் குறிப்பிட விரும்புகிறேன்.





## பூந்தட்டான் சத்தி சிவானந்த சபை

காங்கிரஸ் பொன் விழா திட்டம்.

காங்கிரஸ் பொன்விழவை டிசம்பர் 28-ந் தேதி முதல் 5 நாள் விமரிசையாக நடத்துவதென திட்டம் போட்டிருக்கிறார்கள்.

அந்த விபரம் :—

முதல் நாள் :—தேசீய பஜனை ஊர்வலம், கொடியேற்றுதல், கொடி விற்பனை செய்தல், பொதுக் கூட்டம், நடத்தல், சங்கீதக் கச்சேரி, தீபாலங்காரம் முதலியன.

இரண்டாம் நாள் :—பூப்பந்தாட்டப் போட்டிப் பந்தயம், பள்ளி மாணவர்கள் விளையாட்டு, பிரசங்கம்.

மூன்றாவது நாள் :—பெண்கள் சங்கீதப் போட்டி.

நான்காவது நாள் :—ஆண்கள் சங்கீதப் போட்டி.

ஐந்தாவது நாள்:—பாரதியார் பாடல் போட்டி.

கொடியேற்று விழா, ஊர்வலம், பொதுக்கூட்டம் ஆகிய மூன்றும் மாகாண காங்கிரஸ் கமிட்டியாரோடு இணங்கிச் செய்வார்கள்.

பிரசாரத் திட்டங்கள்

(1) சிறிய, பெரிய தேசீயக் கொடிகள் தெரு விற்பனை செய்தல்,

(2) இல்லங்கள் தோறும் தேசீயக் கொடி பறக்க விடுதற்கும் அன்று இரவு தீப அலங்காரம் செய்யும்படியாகவும், பொது ஜனங்களுக்கு பத்திரிகை மூலமாயும், துண்டு பிரசுரங்கள் மூலமாயும் விண்ணப்பித்துக் கொள்ளுதல்.

(3) அகில இந்திய காங்கிரஸ் மஹா சபை 50 ஆண்டுகளாக நமது பாரத நாடு சுதந்தரமடைவதற்கு செய்த வீரத் தியாகத்தைப் பற்றியும், காங்கிரசுக்காக தலைவர்களும், தொண்டர்களும் புரிந்த அரிய, பெரிய தியாகத்தைப் பற்றியும், சுருக்கத்தில் தெள்ளிய நடையில் புகைபடங்களுடன், தமிழ் ஆங்கிலம் இப்பஷைகளில் அச்சிட்டு புத்தக ரூபமாக பொது ஜனங்களுக்கு இலவசமாக வினியோகித்தல்.



## ரயில் போக்கு வரவு

மதராஸ்-எழும்பூர்

மெயின் லைன்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| இண்டோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் .... | மாலை 9 0 | காலை 6 30 |
| செங்கோட்டை பாஸஞ்சர் .... | காலை 7 30 | மாலை 7 30 |
| கூடலூர் பாஸஞ்சர் .... | மாலை 4 5 | காலை 11 25 |
| திருவனந்தபுரம் பாஸ்டு பாஸஞ்சர்.... | மாலை 9 30 | காலை 5 55 |
| திருச்சி பார்சல் .... | மாலை 10 20 | காலை 5 25 |

கார்டு லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| தனுஷ்கோடி பாஸ்டு பாஸஞ்சர் .... | காலை 11 30 | மாலை 2 45 |
| திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் .... | மாலை 8 0 | காலை 7 5 |

மதராஸ்—சென்ட்ரல்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| கல்கத்தா மெயில் | மாலை 8 30 | காலை 7 45 |
| கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 55 | மாலை 4 20 |
| பம்பாய் மெயில் .... | மாலை 8 40 | காலை 5 55 |
| பம்பாய் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 30 | மாலை 60 |
| பங்களூர் மெயில் .... | மாலை 9 30 | காலை 6 15 |
| „ எக்ஸ்பிரஸ் .... | மாலை 1 0 | மாலை 2 10 |
| „ பாஸஞ்சர் .... | காலை 6 15 | மாலை 7 40 |
| „ „ .... | காலை 9 40 | மாலை 5 30 |
| ஜோலார்ப்பேட்டை பாஸஞ்சர் .... | மாலை 12 40 | மாலை 2 0 |
| அரக்கோணம் பாஸஞ்சர் .... | மாலை 6 30 | காலை — |
| காட்பாடி பாஸஞ்சர்.... | 5 30 | 9 40 |
| மலபார் எக்ஸ்பிரஸ் .... | 8 5 | காலை 7 15 |
| ப்ளு மௌண்டன் எக்ஸ்பிரஸ் .... | 6 15 | 9 35 |




## வட்டி விகிதம்

### ரெங்கூன் நடப்பு வட்டி

| | | |
|---|---|---|
| புவ சித்திரை௴ வட்டி | ரூ. | 0—4—6 |
| ,, வைகாசி௴ ,, | ரூ. | 0—4—0 |
| ,, ஆனி௴ ,, | ரூ. | 0—4—0 |
| ,, ஆடி௴ ,, | ரூ. | 0—4—0 |
| ,, ஆவணி௴ ,, | ரூ. | 0—4—0 |
| ,, புரட்டாசி௴ | ரூ. | 0—4—0 |
| ,, ஐப்பசி ,, | ரூ. | 0—4—0 |
| ,, கார்த்திகை ,, | ரூ. | 0—4—0 |

### மதராஸ் நடப்பு வட்டி

| | | |
|---|---|---|
| சித்திரை௴ வட்டி | ரூ. | 0—8—0 |
| வைகாசி௴ ,, | ரூ. | 0—7—6 |
| ஆனி௴ ,, | ரூ. | 0—6—9 |
| ஆடி௴ ,, | ரூ. | 0—6—3 |
| ஆவணி௴ ,, | ரூ. | 0—5—9 |
| புரட்டாசி௴ ,, | ரூ. | 0—5—9 |
| ஐப்பசி ,, | ரூ. | 0—6—0 |
| கார்த்திகை ,, | ரூ. | 0—7—0 |

### கோழும்பு நடப்பு வட்டி

1935 அக்டோபர் 0—5—3

### செய்கோன்

| | |
|---|---|
| புவ ஐப்பசி நடப்பு வட்டி | 0—4—0 |
| ,, தவணை வட்டி | 0—4—0 |

**8-11-35-ல் நெல் விலை பீக்கல் ஒன்றுக்கு $ 2·05 லிருந்து 2·15 வரை.**

### பினங்கு

| | |
|---|---|
| புவ ஐப்பசி நடப்பு வட்டி | 0—4—0 |
| ,, 1உ தவணை வட்டி | 0—3—6 |
| ,, 17உ ,, | 0—3—6 |

### சிங்கப்பூர் நடப்பு வட்டி

புவ ஐப்பசி௴ 0—4—0

தவணை வட்டி

புவ ஐப்பசி௴ 16உ 0—3—6

---

ரிசர்வ் பாங்க்:—மூன்று பெர்செண்டு.

இங்கிலாந்து பாங்க்:—இரண்டு பெர்செண்டு.

### உண்டியல் விலை

| | |
|---|---|
| ஸ்டெரயிட்ஸ் விற்பனை | 157½ |
| ,, 30 நாள் தவணை வாங்குவது | 150 |

### ரப்பர்

லண்டன், டிசம்பர், 9உ

லண்டன் ஷீட் ரப்பர் வாங்குவோர் விலை பவுன் 1-க்கு 6 5/16 பென்ஸ்
விற்பவர் விலை 6 8/3பென்ஸ்

---

### தங்கம், வெள்ளி

சென்னை, டிசம்பர், 10உ

| | |
|---|---|
| சவரன் (சில்லறை) | 22—4—3 |
| ,, மொத்தமாக | 22—4—0 |
| ஆலைத்தங்கம் தோலா 1-க்கு | 34-12-6 |
| மூஸா தங்கம் ,, | 34—6—6 |
| வெள்ளி மொத்த விலை | |
| 100 ரூபா எடைக்கு | 62—7—0 |
| 1 ரூபா எடைக்கு | 0—10—6 |

### ரங்கூன்
## மார்க்கட் நிலவரம்

ரங்கூன், டிசம். 11.

| | |
|---|---|
| படகு நெல் | 100/102 |
| ரயில் நெல் | 97/98 |
| பெரிய மில்லரிசி ஸ்பெஷல் | 205/250 |
| நசேன் சிறிய மில்லரிசி | 215/260 |
| நசேன் எஸ். க்யூ | 270 |
| மீடான் பஜார் | 235/282-8 |
| மீடான் எஸ். க்யூ | 297-8 |
| ரெடி புழுங்கல் அரிசி | 247-8/267-8 |
| முழுப் புழுங்கல் | 230/252-8 |
| யதெலே | 275/285 |

## கப்பல்

---

### சென்னையிலிருந்து
ரங்கூன்

எரின்புரா:—டிசம்பர் 16-ந்தேதி வந்து 20-ந் தேதி புறப்படும்.

வெள்ளிக்கிழமை தோறும் ரங்கூனுக்கு மெயில் கொண்டு போகும்.

---

### மலாயா

ரோனு:—டிசம்பர் 14-ந் தேதி வந்து 17-ந் தேதி புறப்படும்

ரஜூலா:—டிசம்பர் 28-ந் தேதி வந்து 31-ந் தேதி புறப்படும்.

---

### கொழும்பிலிருந்து மலாயாவுக்கு

| | |
|---|---|
| ராஜுபுதன | 17—12—35 |
| அன்யோமாரு | 20—12—35 |
| சிட்ரஸ் | 29—12—35 |

---

### நாகப்பட்டணத்திலிருந்து மலாயாவுக்கு

ரஜூலா 21—12—35

### மலாயாவிலிருந்து நாகப்பட்டணத்திற்கு

ரஜூலா 26—12—35

---

### சென்னையிலிருந்து புறப்படும் பிரஞ்சுக் கப்பல்கள்
(வி. கே. அய்யாறிவிக்கிறார்.)

| | |
|---|---|
| ஆன்ழோர் | 24-12—35 |
| பர்னர்தீன் தெசான்பியார் | 21—1—36 |
| தெர்தக்னன் | 18—2—36 |

ஸ்பார்ட்டன் & கம்பெனி

ஸ்பார்ட்டன் பிரஸ்

எங்களிடம் பல விதமான கலர் அச்சு வேலைகளும், பைண்டிங், டிராயிங், போட்டோ ஆப் டோன், லயன் பிளாக்குகளும், அரக்கு சீல்களும், எங்கிரேவிங், ரப்பர் ஸ்டாம்புகளும், வேலை சுத்தமாகவும், விலை சகாயமாகவும், குறித்த காலத்திற்குள் செய்து கொடுக்கப்படும்.

SPARTAN & CO. MADRAS BROADWAY

156. பிராட்வே, மதராஸ்.

---

அதிக விலை என்ற கவலை வேண்டாம்! மிகவும் குறைக்கப்பட்டுள்ளது!!

இன்றே ருக்மணி குக்கர் அடுக்கு

ஒன்றை வாங்கி சமையல் செய்தால் ஆனந்தமடைவீர்கள். ஒரு தடவை உபயோகித்தால் விட மனம் வராது.

**1** முதல் **16** பேர்களுக்குரிய ஏழு அளவுகளின் விலை ரூ. **9** முதல் **38** வரை.

விபர புத்தகம் இனாம்.

ருக்மணி குக்கர் கம்பெனி, ராயபுரம், (10) சென்னை.

---

நீங்கள் லாபம்பெற விரும்பினால்

"ஊழிய"னில் விளம்பரம் செய்யுங்கள்.

---

## ஊழியன் சந்தா

| | | |
|---|---|---|
| உள்நாடு வருடச் சந்தா | ரூ. | 6-0-0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 3-0-0 |
| வெளிநாடு வருடச் சந்தா | ,, | 10-0-0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 5-0-0 |

காரியஸ்தர்,

"ஊழியன்" ஆபீஸ்,

56, தம்புசெட்டித் தெரு,

சென்னை.

---

## நேயர்காள்!

பத்திரிகையில் காணும் விளம்பரப்படி சாமான்கட்கு ஆர்டர் கொடுக்கும் போது தயவு செய்து 'ஊழியன்' பெயரை குறிப்பிட மறந்து விடாதீர்கள்.

---

## ராய. சொ. நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | தாலாட்டும் கும்மியும் | 0—2—0 |
| 2. | காந்தி இருபா | 0—3—0 |
| 3. | புதுமைப் பாக்கள் | 0—4—0 |
| 4. | காந்தி பதினெண்பா | 0—5—0 |
| 5. | காந்தி பிள்ளைத்தமிழ் | 0—6—0 |
| 6. | காதற் கடிதங்கள் | 0-10—0 |

கிடைக்குமிடங்கள்:-

காரைக்குடியில்:—

சுதேசி எம்போரியம்

மோதிலால் எம்போரியம்

பாரதி பிக்சர் பாலெஸ்

இரங்கூனில்:—

பாரத் பந்தர் 110x48வது வீதி.

நவீன கதா புத்தகசாலை

251, மங்கோமாரி வீதி.

ராய. சொ. பதிப்பகம்

56, தம்பு செட்டித்தெரு, சென்னை.

உயர்ந்த நடிப்பு!

உயர்தர சீன்கள் !!

சினிமாப்

பிரியர்களுக்கு

விருந்து !!!

ஆரம்பத்

தேதியை

எதிர்

பாருங்கள்.






For Booking Apply To :—

**Chellam Talkies, Producing & Distributing Co.,**

AVANASHI ROAD, COIMBATORE.

Printed and published by Rama Kasinathan for the India Publications Ltd., at the Oolian Power Press, 56, Thambu Chetty Street, Madras.

